ஸ்ரீ காமாக்ஷி துணை.

# ஜகத்குருவின் உபதேசங்கள்.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜகத்குரு
ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகளின்
சென்னை உபந்யாஸங்கள்

மூன்றாம் பாகம்.

ரிடையர்டு ஜில்லா ஜட்ஜ்
ஸ்ரீமான் **R. S.** சங்கரய்யரவர்கள் எழுதிய
முகவுரையுடன் கூடியது.

---

சென்னை ஹிந்து மத்ய கமிட்டி
சார்பில்
மைலாப்பூர்
ஸ்ரீ காமாக்ஷி நிலயத்தாரால்
பிரசுரிக்கப்பட்டது.

---

விலை அணா **6.**]　　1933　　[தபால் சார்ஜ் வேறு.

# பிரசுரகர்த்தரின் விக்ஞாபனம்.



ஸ்ரீகாமகோடிபீடத்தில் 68-வது ஆசார்யாளாகத் தற்பொழுது வீற்றிருக்கும் பரமாசார்யாளை யறியாத ஆஸ்திகர்களில்லை. சென்ற செப்டம்பர்மீ அவர்கள் சென்னைக்கு விஜயம்செய்து, அதன் முக்ய பேட்டைகளி லெல்லாம் அவ்வந்த விடமுள்ள வாஸிகளின் ஆவலுக் கிணங்க ஆங்காங்கு சென்று தாமதித்து, அரிய உபன் யாஸங்களைச் செய்து, நம் மக்களின் மனப்பான்மை வைதிகமதமார்க்கத்தில் முற்றிலும் ஈடுபடும்படி செய்து விட்டார்களென்பது, மத உணர்ச்சியுள்ள எல்லோரும் ஒப்புக்கொள்ளத்தக்கதே. ஸ்ரீ ஸ்வாமிகள் சுமார் தமது 13-வது வயதில் உலகைத் துறந்து, காவியுடை தரித்து 'உலககுரு' வென்னும் உத்தமப் பதவியை யடைந் தார். எனினும் அப்பதவிக்கு அனுதியாயேற்பட்ட ராஜரீகங்களைத் தாமரையிலை நீரைப்போல், பற்றின்றி தாங்கிவருகின்றனர். காயக்லேசாதிகளைச் செய்து கடுந் தவம்புரிந்து பரமயோகியாய் மனதை முற்றிலும் தன் வசப்படுத்தியவர். உள்ளம் கசிந்து உலகத்தின் தாய் தந்தையரான ஸ்ரீ திருபுரசுந்தரி சந்திரமௌளீசுவரர் இவர்களின் பாதாரவிந்தங்களில் அதைச் ஸமர்ப்பித்து, "லோகா: ஸமஸ்தா: ஸுகிநோபவந்து" "உலகெல் லாம் வாழ்க" என்று பிரார்த்தித்து முக்காலங்களிலும் தவறாது பூஜித்து விளங்குபவர். தம்மிடம் வருகிறவர்

களுக்கு "நமக்கு உடல் ஒரு வியாதி, இவ்வியாதியைப் போக்க அத்வைதஞானமே உயர்ந்த ஔஷதம், அதற்கு முறைகள் தெய்வத்தன்மைவாய்ந்த நமது மகரிஷிகளால் நமது புராதன நூல்களில் அனுபவத்தால் நமக்கேன்று அறிவிக்கப்பட்டிருக்கின்றன அவைகளைக் கவனித்து அனுபவத்தில் கொண்டுவராமல் இருக்கலாகுமா?" என்று ஸதா ஸதுபதேசம்செய்து, நம் க்ஷேமத்தையே முக்ய முன்னோக்கமாகக் கருதியவர். இப்படியே சதா தம் ஆசிரமத்துக்கேற்க பிறருக்கென காலம் கழித்துவரும் நமது ஸ்ரீமதாசார்யாளுக்கு நம்போன்ற ஆஸ்திகர்கள் நம்மனதிலுள்ள நன்றியறிவை எப்படி நிரூபிக்கமுடியும்? ஸ்ரீ ஸ்வாமிகள் செய்யும் உபதேசங்களை உலகமெங்கும் பரவச்செய்வதைக் காட்டிலும் நாம் செய்யத்தக்க வேலை வேறொன்றுமில்லை என்பது தவறாகாது. அக் கருத்தையுட்கொண்டுதான் இச்சிறு புத்தகத்தை வெளியிடும் கைங்கர்யத்தை நாங்கள் சிரமேற்கொண்டோம். நம்மக்களனைவரும் இந்நூலில்கண்ட விஷயங்களைத் தாங்கள் படித்தும், பிறருக்குச் சொல்லியும், அவ்விஷயங்களை அவரவர்கள் அநுபவத்திலும் கொண்டுவருவார்களானல் அதுவே அவர்களின் ஆசார்ய பக்திக்குப் போதுமான அத்தாட்சி.

இப்புத்தகத்துக்கு எங்கள் வேண்டுகோளுக்கிணங்கி முகவுரையை அன்புடன் எழுதிக்கொடுத்துதவிய, ஸ்ரீமதாசார்யாளின் முக்ய சிஷ்யர்களில் ஒருவரும், ஸ்ரீஸ்வாமிகள் ஆதிபகவத்பாதாளின் ஸாக்ஷாதவதாரமே என்று திடமாய் நம்பி திருடபக்தியுடன் அவர்களிடம்

ஈடுபட்டுள்ள, ரிடையர்டு ஜில்லா ஜட்ஜு ஸ்ரீமான் R. S. சங்கரய்யர் அவர்களுக்கு நன்றிபாராட்டுகிறோம்.

இதில் பிரசுரிக்கப்பட்டிருக்கும் உபந்யாஸங்கள் அனேகமாய் நமது சுதேசமித்திரன் பத்திரிகையில் வெளிவந்தவைகளே. அவற்றைப் புத்தக ரூபமாய் அச்சிடுவதற்கு எங்களுக்கு அளவற்ற உதவிபுரிந்தவரும் நமது ஆசார்யாளிடத்தில் ஆழ்ந்த பக்தியுள்ளவரும் சுதேசமித்திரன் உதவிப் பத்திராதிபருமான ஸ்ரீமான் K. விச்வநாதய்யரவர்களுக்கும், ஷை உபந்யாஸங்களைப் பிரசுரம்செய்ய அனுமதிகொடுத்துதவிய மித்ரன் பத்ராதிபருக்கும் நன்றிபாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம்.

கடைசியில் அச்சிட்டிருக்கும் சில உபந்யாஸங்களின் குறிப்புகள் சென்னை தங்கசாலைத் தெரு ஸ்ரீமான் C. ஜகன்னாத சாஸ்திரியால் தெலுங்கு பாஷையில் எடுக்கப்பட்டு பிறகு எங்களால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

இச்சிறு புத்தகத்தில் குற்றங் குறைகளிருப்பின் அவை எங்களுடையவைகளே யென்று நாங்கள் தெரிவித்துக்கொள்ளத் தேவையில்லை. ஆஸ்திகர்கள் அவைகளைப் பொருட்படுத்தாது குணங்களை கிரகிப்பார்களென்று நம்புகிறோம்.

மைலாப்பூர்
15—4—33.

"குருதாஸன்"



# அறிவிப்பு.



ஸ்ரீ ஸ்வாமிகளவர்களின் உபதேசங்களை ஆஸ்திகர்களனை வரும் படித்துப் பயனடையுமாறு இப்புத்தகத்திற்குக் குறைந்த விலை வைக்கப்பட்டிருக்கிறது. புஸ்தகம் வேண்டியவர்கள் வி. பி. மூலம் பெற்றுக்கொள்வதானல் தபால் செலவுகளுக்காக 6 அணு அதிகமாக செலவழிக்கவேண்டிவரும். ஆகையால் தேவையானவர்கள் ஒரே சமயத்தில் அதிகப் பிரதிகள் ஆர்டர் செய்தால் தபால் செலவுகளைக் குறைத்துக்கொள்ளலாம். அல்லது 0-7-0 பெறுமான தபால் லேபில்கள் அனுப்பிவைத்தால் புக் போஸ்டில் ஒரு காபி யனுப்பப்படும்.

காமாக்ஷி நிலையம்,

மைலாப்பூர்.

# முகவுரை.



ஸ்ரீ ஆதிசங்கரபகவத்பாதாள் வேதத்தின் கருத்து, கர்ம (சித்தசுத்தி), உபாசனே (ஏகாக்ரதை), ஞானம் (அறிவு), இவைதானென்று ஸ்தாபித்து, பிறகு இந்த வேதார்த்தங்கள் பரவி குழப்பமின்றி நிலைபெறுமாறு, தன்னுடைய பிரதான சிஷ்யர்களில், நால்வருக்கு சிருங்ககிரி, பூரிஜெகந்நாதம், த்வாரகை, ஜோதிர்மடம் இந்நான்கு மடங்களையும் ஏற்படுத்தி சிஷ்யப்ரசிஷ்யக் கிரமமாய் ஜனங்களுக்கு உபதேசம் செய்யும்படி ஏற்பாடு செய்தார்கள். தமது மடமாக ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடத்தை அங்கீகாரம் செய்து, சிஷ்யப்ரசிஷ்யக் கிரமமாய் உபதேசம் செய்து வரும்படியும் ஸ்தாபித்தார்கள்.

ஸ்ரீ காமகோடி பீடத்தில் இருந்துவரும் ஆசாரியர்களுக்கு ஞான ஐசுவரியத்தை அளிக்கும் குருபரம்பரையைக் குறிப்பிடும் “இந்திரசரஸ்வதி” என்ற பட்டமும், சிஷ்யமடாசாரியர்களுக்கு ஞானத்தில் அபிருசி என்பதை குறிக்கும் “பாரதி” என்ற பட்டமும் ஏற்பட்டு இதுவரையில் வழங்கிவருகின்றன.

ஆதிசங்கரபகவத்பாதாள் முதல் 68-வது பரம்பரையில் காமகோடிபீடாதிபதியாய் ஜகத்குருவாய் சகல ஜனங்களுக்கும் ஆதிசங்கரபகவத்பாதாள்போலவே ஞானத்தைத் தெளிவாக புகட்டும் ஸ்ரீ சந்திரசேகரேந்திர

சரஸ்வதி குருசரணுள் தற்காலத்தில் வேத ஆதார மில்லாமலிருக்கிற, மதக்கொள்கைகள் பரவி, வேததர்மத்தில் சிரத்தை குறைந்து, கர்மோபாசன ஞானமார்க்கங்களில் ஆபாசங்கள் ஏற்பட்டு, சீர்திருத்தங்களுக்கு அத்யாவசியம் உண்டான தருணத்தில், ஸ்ரீசங்கரரே மறுபடியும் அவதரித்தாரென்றே சொல்லும்படி பக்த கோடிகளுக்கு வேதார்த்தங்கள் மிகவும் சுலபமாகத் தெரியவருமாறு எளிய தமிழ் நடையில் செய்த உபந்யாசங்களை நேரில் கேட்டவர்களும், பத்திரிகைகள் வாயிலாகப் படித்தவர்களும் அதன்மூலம் தாங்கள் அடைந்த கர்மோபாசன ஞான சுத்திவிருத்தி அம்சங்களை சகல ஜனங்களும் அடையுமாறு மேற்படி உபந்யாசங்களைப் புஸ்தக ரூபமாய் பரவச்செய்யும்படி வேண்டிக்கொண்டபிரகாரம் இது வெளியிடப்பட்டிருக்கிறது.

இந்தப் புஸ்தகங்களைப் வேதாபிமானிகள் தாங்கள் அடிக்கடி படிப்பதுமல்லாமல், ஏராளமாக வாங்கி, ஏழை ஜனங்களுக்குத் தர்ம விநியோகம் செய்வதுடன் படிக்கத் தெரியாதவர்களுக்கும், படித்தும் சரியான அபிப்பிராயத்தை கிரகிக்க தெரியாதவர்களுக்கும் சரியான மார்க்கத்தில், அறிந்து, தெளிவுற்று, மேன்மேலும் தாங்களே சுயமாக விருத்தியை தேடும்படியான ஆக்ரகத்தைப் புகட்டுமாறு நான் விநயமாய் வேண்டிக் கொள்ளுகிறேன்.

மேற்சொல்லிய விசேஷ கைங்கரியத்தைத் தங்களுடைய பக்தி விசாலத்தையும் உறுதியையும் காட்டக் கூடிய ஓர் அறிகுறியாக எண்ணி ஸ்ரீ ஜகத்குருவின்

கிருபாபூர்வம் தங்களுக்குக் கிடைத்த ஞான ஐசுரியவயத்திற்குக் குருதட்சிணையாக பாவித்து ஊக்கத்துடன் கைக்கொள்ளுமாறு நான் வணக்கமாய் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இந்தப் புஸ்தகத்திற்கு நான் முகவுரை எழுதத் துணிந்ததற்கு சில நியாயங்கள் உண்டு. முதலாவது, நான் இம்மடத்தின் சிஷ்யகுலத்தவன், இரண்டாவது என் பிதாமகர் தமது அந்தியகாலத்தில் அக்காலத்தில் மடாதிபதியான ஸ்ரீமகாதேவேந்திரசரஸ்வதிகளின் சந்நிதானத்தில் புராணபட்டணம் செய்துவந்தார். மூன்றுவது, அதே சந்நிதானத்தில் பஞ்சாங்க நிர்ணய விஷயத்தில் மத்யஸ்தர்களாகவிருந்து திருக்கணிதமே சரியென்று ஸ்தாபித்த மூவரில் ஒருவர் என் பிதா (திவான் பகதூர் R. V. ஸ்ரீனிவாசய்யர், C. I. E. Inspector-General of Registration, Madras). இது சிரௌதிகள் (திருக்கணித) பஞ்சாங்கம் முதலிலுள்ள விஜய ஸ்ரீ முகத்தில் காணலாம்.

இந்த சந்தர்பத்தில், ஸ்ரீஸன்னிதானத்தின் ஒரு முக்யமான அபிப்பிராயத்தை வெளியிடவேண்டியது அவசியமென்று நினைக்கிறேன். அதாவது தற்காலத்தில் தேசஸ்திதியையும் அரசாங்கக் கிரமத்தையும் ஜனங்களின் பிரவிர்த்திகளையும் அந்நியதேசத்தவர் சம்பந்தத்தையும் தற்கால லோக விவகாரத்தையும் அனுசரித்த அபிவிர்த்தி மார்க்கத்தையும் நோக்குங்கால் விவேகிகளான லௌகிகர்களுக்கு எந்த நவீன நாகரீகங்கள் அவசியமென்று தோன்றுகின்றனவோ அவற்றை சந்நிதானமும் அங்கீகரிப்பார் என்ற நம்பிக்கை இருக்கவேண்டியது.

அந்த அவசியங்களை ஒட்டி அனுஷ்டிக்கும் நாக ரீகங்களை சந்நிதானத்தின் ஆக்ஞா அனுமதியின்பேரில் கைக்கொள்வது பரஸ்பர கௌரவத்தையும் ஐக்யமத்யத் தையும் விருத்தி செய்வதுடன் தைரியத்தையும் விளைவிக்குமென்பதே.

இப்படி
எப்பொழுதும்
ஸ்ரீ ஸன்னிதானத்தின் நினைவும்
அவர்களிடத்தில் பக்தியும்
இருக்கும்
**சங்கரன்.**

26-2-'33.
சங்கரம்,
Lawley Road P.O.,
கோயமுத்தூர்.

**R. S. Sankara Ayyar,**
*Retired Dt. & Sessions Judge,*
**Coimbatore.**

॥ श्रीगणेशाय नमः ॥

चन्द्रशेखर चन्द्रशेखर चन्द्रशेखर पाहि माम् ।
चन्द्रशेखर चन्द्रशेखर चन्द्रशेखर रक्ष माम् ॥ १ ॥

रत्नसानुशरासनं रजताद्रिशृङ्गनिकेतनं
शिञ्जिनीकृतपन्नगेश्वरमच्युताननसायकम् ।
क्षिप्रदग्धपुरत्रयं त्रिदिवालयैरभिवन्दितं
चन्द्रशेखरमाश्रये मम किं करिष्यति वै यमः ॥ २ ॥

पञ्चपादपपुष्पगन्धपदाम्बुजद्वयशोभितं
फाललोचनजातपावकदग्धमन्मथविग्रहम् ।
भस्मदिग्धकलेवरं भवनाशकं भवमव्ययं
चन्द्रशेखरमाश्रये मम किं करिष्यति वै यमः ॥ ३ ॥

मत्तवारणमुख्यचर्मकृतोत्तरीयमनोहरं
पङ्कजासनपद्मलोचनपूजिताङ्घ्रिसरोरुहम् ।
देवसिन्धुतरङ्गशीकरसिक्तशुभ्रजटाधरं
चन्द्रशेखरमाश्रये मम किं करिष्यति वै यमः ॥ ४ ॥

यक्षराजसखं भगाक्षिहरं भुजङ्गविभूषणं
शैलराजसुतापरिष्कृतचारुवामकलेबरम् ।
क्ष्वेडनीलगलं परश्वधधारिणं मृगधारिणं
चन्द्रशेखरमाश्रये मम किं करिष्यति वै यमः ॥ ५ ॥

कुण्डलीकृतकुण्डलेश्वरकुण्डलं वृषहवाहनं
नारदादिमुनीश्वरस्तुतवैभवं भुवनेश्वरम् ।

अन्धकान्तकमाश्रितामरपादपं शमनान्तकं
चन्द्रशेखरमाश्रये मम किं करिष्यति वै यमः ॥ ६ ॥

भेषजं भवरोगिणामखिलापदामपहारिणं
दक्षयज्ञविनाशकं त्रिगुणात्मकं त्रिविलोचनम् ।
भुक्तिमुक्तिफलप्रदं सकलाघसङ्घनिबर्हणं
चन्द्रशेखरमाश्रये मम किं करिष्यति वै यमः ॥ ७ ॥

भक्तवत्सलमर्चितं निधिमक्षयं हरिदंम्बरं
सर्वभूतपतिं परात्परमप्रमेयमनुत्तमम् ।
सोमवारिनभोहुताशनसोमपानिलखाकृतिं
चन्द्रशेखरमाश्रये मम किं करिष्यति वै यमः ॥ ८ ॥

विश्वसृष्टिविधायिनं पुनरेव पालनतत्परं
संहरन्तमपि प्रपञ्चमशेषलोकनिवासिनम् ।
क्रीडयन्तमहर्निशं गणनाथयूथसमन्वितं
चन्द्रशेखरमाश्रये मम किं करिष्यति वै यमः ॥ ९ ॥

मृत्युभीतमृकण्डसूनुकृतस्तवं शिवसन्निधौ
यत्र कुत्र च यः पठेन्न हि तस्य मृत्युभयं भवेत् ।
पूर्णमायुररोगितामखिलार्थसंपदमादरं
चन्द्रशेखर एव तस्य ददाति मुक्तिमयत्नतः ॥ १० ॥

॥ इति श्रीचन्द्रशेखराष्टकस्तोत्रं संपूर्णम् ॥



* " நமது வேதமானது

1. ஸத்தியத்தைச் சொல்,
2. தர்மத்தை நடத்து,
3. அன்னையை தெய்வமெனக்கொள்.
4. பிதாவைத் தெய்வமெனக்கொள்,
5. குருவை தெய்வமெனக்கொள் "

என்று உபதேசித்திருக்கிறது.

நமது சைவம் வைஷ்ணவம் முதலிய ஆறு சமயங்களையும் நமது புண்ணிய பூமியில் ஸ்தாபிக்கும் பொருட்டு ஆயிரக் கணக்கான வருஷங்களுக்கு முன்னர் நமது நாட்டில் அவதரித்த ஸ்ரீ ஆதிசங்கரபகவத் பாதாசார்யஸ்வாமிகள் அவர்கள் அருளிய பிரச்னோத்தர ரத்னமாலிகை என்னும் நூலில் வேதத்தில் சொன்ன, 'ஸத்தியம்,' 'தர்மம்' இவைகளின் பொருளை இவ்விதம் விவரித்திருக்கிறார்கள் :—

* 1932ஹு செப்டம்பர்மீ சென்னைக்கு விஜயம் செய்து $4\frac{1}{2}$ மாதங்கள் தங்கி சென்னைமாநகரில் உள்ள மஹா ஜனங்களுக்கு ஆசிகூறி மஹாமகத்திற்காக யாத்திரையாகப் புறப்படுங்காலை ஸ்ரீ ஆசார்யஸ்வாமிகள் அருளிய மொழிகள்.

प्र–किं सत्यं ?

வினு—கிம் ஸத்யம் ?

ஸத்யம் எது ?

उ–भूतहितम् ।

விடை—பூதஹிதம்.

அர்த்தம்—பிராணிகளுக்கு க்ஷேமகர மான உண்மைதான் ஸத்யம்.

प्र–को धर्मः ।

வினு—கோ தர்ம:

தர்மம் என்ருல் என்ன ?

उ–अभिमतो यः शिष्टानां निजकुलीनानाम् ।

விடை—அபிமதோ ய: சிஷ்டாணும் நிஜகுலீனுணும்.

அர்த்தம்—தன்னுடைய வம்சத்தில் ஸதாசாரமுள்ள ஸாதுக்களான முன்னேர்கள் எது தர்மமென நினைத்தார்களோ அதுவே ஒருவனுக்கு தர்மம்.

நமக்கு ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு மாதா, பிதா, குரு. இவ்விதம் தனித்தனி ஏற்பட்டிருப்பவர்களை நாம் தெய்வமாக நினைத்து நடக்க வேண்டுவதற்கு ஆதாரமாக உலகத்திலுள்ள நம் எல்லோருக்கும் அன்னையாகவும், பிதாவாகவும், குருவாகவும் அருளும் அம்பாள், ஈச்வரன்,

ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி அல்லது கீதையை உபதேசித்த ஸ்ரீகிருஷ்ணபகவான் இவர்களை மனதைவிட்டு அகலாது நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும்.

வேதியர்கள், வேதசாஸ்திரங்களில் சொல்லப்பட்ட கர்மானுஷ்டானங்களைப் புறக்கணிக்காது கூடியமட்டும் அவைகளை அனுஷ்டிப்பதுடன் தங்கள் உடை நடை முதலியவைகளால் சுமத்திக்கொண்டிருக்கும் அதிகச் செலவுகளையாவது குறைத்துக் கொண்டு, சில ஸமயங்களில் உணவுகூடக் கிடைக்காது சிரமப்படும் குடியான மக்களுக்கும் தீண்டாக்குல மக்களுக்கும் ஒரு வாரத்தில் ஒருமுறை அந்தந்தக் கிராமதேவதைகளின் ஸன்னிதானங்களில் வெள்ளியிலாவது செவ்வாயிலாவது தங்கள் சக்திக்கு இயன்றவாறு கஞ்சி, கூழ் முதலியவைகளை ஊற்றிவைக்கும் கடமையைக் கைக்கொள்ள வேண்டும்.

வர்த்தகர்கள், வேளாளர்கள், தொழிலாளர்கள், குடிமக்கள் முதலாயினோர் தங்கள் குலத்தில் உதித்த பெரியோர்களின் மனப்பான்மையை அனுஸரித்து அந்தணர்களையும், தீண்டாமக்களையும் அன்புடன் ஆதரிப்பதே கடமையாகக் கொள்ளவேண்டும்.

தீண்டா மக்கள், 63 நாயன்மார்களில் திலகமாய் விளங்கும் ஸ்ரீ நந்தனாரின் ஒழுக்

கத்தைக் கடைப்பிடித்து, ஈசனிடத்திலேயே பேரன்பு செலுத்தித் தங்கள் முன்னோர் களின் குலாசாரத்தை மீறி நடவாது இவ் விரு ஒழுக்கத்தையும் நெறியாகக்கொண்ட நந்தனாரின் உள்ளொளி எவ்விதம் பரம சிவனுடைய பாதாரவிந்தத்திற்கு ஆளா யிற்றோ, எவ்விதம் நந்தனாரின் இவ்வுலக வாழ்க்கைக்கு ஆதாரமான நெல்விளை நிலமும் தானே செழித்ததோ, அதுபோல் தம் குலத்து முன்னோர்களுடைய தர்மத் தைக் கடைப்பிடித்து அருளையும் பொருளை யும் பெற்று, பக்தி, பொறுமை, அடக்கம், இவைகளில் எல்லோருக்கும் வழிகாட்டிக ளாக இருக்கவேண்டும்.

எல்லா ஸமூஹத்திலுள்ள ஸ்திரீகளும், புருஷர்கள் அயற்பழக்கங்களினால் ஒரு ஸமயம் ஸமயாசாரங்களில் வழுவினாலும் பண்டைக்காலத்து திலகவதியாரைப் போலும் மங்கையர்க்கரசியாரைப்போலும் ஈசனிடத்தில் சித்தத்தை ஒரே நிலையாகச் செலுத்தித் தம் கணவன், உடன்பிறந்தார், மக்கள் இவர்களையும் நல்வழிப்படுத்த வேண் டும். இவ்விதமான நம் பெரியோர்களின் நல்வழிகளால் நம் ஸமயமும், ஸமூஹமும் மேன்மேலும் க்ஷேமத்தை அடைய வேண்டும்.''



# வித்யாப்யாச காலக்கடமைகள்.

## சுவாமிகளின் உபதேசம்.

वागर्थाविव संपृक्तौ वागर्थप्रतिपत्तये ।
जगतः पितरौ वन्दे पार्वतीपरमेश्वरौ ॥

யாரேனும் ஒரு பெரியவர் நம்முடைய வீட்டிற்கு வரும்போது, குடும்பத்தார் எல்லோரும் சேர்ந்து அவரை உபசரிப்பது வழக்கம். நீங்கள் ஆயிரம் பெயர்கள் ஒரு குடும்பமாக இருப்பது ஒரு பாக்கியம். கவிகளில் காளிதாஸன் சிரேஷ்டமானவர். அவர் ரகுவம்ச ஆரம்பத்தில் வாக்கு, அர்த்தம் ஆகியவை களின் ஸ்வரூபமும் ஜகத்துக்கு மாதா பிதாக்களுமாகிய பார்வதி பரமேசுவரர்களை நமஸ்கரிக்கிறேன் என்று சொல்லியிருக்கிறார். (சுலோகம் தலைப்பில் போடப்பட்டிருக்கிறது) ஜகத்துக்கு அவர்கள்தான் தாயார், தகப்பனர் என்பதிலிருந்து ஜகத் முழுமையும் ஒரு குடும்பமென்று ஏற்படுகிறது. அந்தப்பெரிய குடும்பத்தில் இந்தப் பள்ளிக்கூட உபாத்தியாயர்களும் குழந்தைகளும் சேர்ந்து ஒரு சிறிய குடும்பம். "சிசுவாக இருக்கையிலேயே வித்தையை ஜாக்கிரதையுடன் கிரஹிக்க வேண்டு" மென்று

---

சென்னை தங்கசாலைத்தெருவிலுள்ள ஹிந்து தியலாஜிகல் ஸ்கூலில் வித்தியார்த்திகளுக்கு 1932-ம் ஹு டிஸம்பர்மீ 18-ம் தேதி யன்று ஸ்வாமிகள் செய்த உபந்யாசம்.

காளிதாஸன் சொல்லியிருக்கிருர்; வித்தைக்கு இரண்டு அங்கங்கள் உண்டு. ஒன்று குரு பக்தி, மற்றது விநயம். கோபம், கண்டனம் முதலியன வித்தியாப்பியாச காலத்தில் கூடாதவை. வித்தையைக்கற்று அதைப் பிறகு பிரயோகம் செய்கையில் கோப முதலியன சில சந்தர்ப்பங்களில் வேண்டியிருக்கலாம். குழந்தைகளாக இருக்கையில் சுதந்தரம், பெரியார் சொல்லை மீறி நடத்தல் முதலியன கூடாது. மருந்து சாப்பிடும் போது பத்தியமாக இருக்கவேண்டியிருக்கிறது. படிப்பும் ஒரு மருந்து. பத்தியத்தினலேயே ஜ்வரம் நிவர்த்தியாகி விடுவதுண்டு. மருந்துகூட இரண்டாம் பட்சமானது தான். பத்தியமேமுக்கியம். படிப்புக்குப் பத்தியமாகிய குருபக்தியும் விநயமும் அத்யாவசியமானவை. வணக்கம் உயர்வு தரும் என்பதற்கு பாததூளியை ஒரு உதாரணமாகச்சொல்வதுண்டு. காலிலிருந்து கிளம்பி அது மேலே போகிறது. தாழ்மை பிறகு மேலே கிளப்பி விடுமென்பதை அந்த உதாரணம் விளக்குகிறது. குழந்தையாக இருக்கையில் ஆசார்யானுக்ரஹம் பெற வேண்டும். இப்பொழுது தாழ்மையுடனிருப்பின் பிறகு மேன்மை உண்டாகும். இந்தப் பள்ளிக்கூடத்தில் அந்தக்குணம் நிரம்ப இருப்பதாகத் தெரிகிறது.

வித்தியாப்பியாச காலத்தில் குழந்தைகளுக்கு வேறு வேலையே கூடாது. மாத்ருபக்தி, பித்ருபக்தி, குருபக்தி, மூன்றும் இருந்தால் பிறகு மேன்மை தானுக வரும். சிலர் அகம்பாவமுடையவர்களாக இருப்பதற்குக் காரணம் அவர்கள் மாத்ருபக்தி, பித்ருபக்தி

குருபக்தியில் குறைந்தவர்களாக இருந்ததேயாகும். அவர்களுடைய அனுக்ரஹத்தைப் பெற்றவனே அவர்களை உடையவன். வேதம் அடிக்கடி மாத்ருபக்தி பித்ரு பக்தியை வற்புறுத்தியிருக்கிறது. வெவ்வேறு சாகைகள், வெவ்வேறு உபநிஷத்துகள் இதைச் சொல்லியிருக்கின்றன. ஔவையாரும் 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வ' மென்று சொல்லியிருக்கிறார். வேதமும் ஔவையாரும் மாதாவையும் பிதாவையும் தெய்வமாக பாவிக்கவேண்டுமென்று சொல்லியிருப்பதால், தெய்வமொன்றிருக்கிறது என்பது நிச்சயம். வித்தியாப்பியாசம் ஒருயோகம். கலங்காத சித்தத்துடன் அதில் முயற்சி செய்யவேண்டும். வித்தியாப்பியாச காலத்தில் லோக காரியங்களில் பிரவேசிக்க வேண்டாம்; பரோபகாரம் செய்யவேண்டாமா, தனக்காக மாத்திரமா படிப்பது என்று கேட்கலாம். பரோபகாரம் அவசியம் செய்யவேண்டும். அதற்கு அவசியமான வித்தையை சம்பாதித்துக்கொண்டு பிறகு அதில் பிரவேசிக்க வேண்டும். மூட்டை தூக்கி ஜீவனம் செய்கிற ஒருவன் ஜ்வரத்தால் அவஸ்தைப்படுகிறான். அப்பொழுதும் மூட்டைதூக்கச் சிறிது சக்தியிருக்கிறது. ஆனால் மூட்டையைத் தூக்கி பிரயாசைப்பட்டானாயின் ஜ்வரம் அதிகமாகிவிடும். அதுள்ளவரையில் சும்மா விருந்து மூட்டையைப் பிறகு தூக்க சக்தியைத் தேடிக்கொள்ள வேண்டும். அப்படியே வித்தியாப்பியாசம் லோக சேவைக்குப் பூர்வாங்கம். லோக விஷயங்களைக் காதில் போட்டுக்கொள்ளாமல் ஆசார்யபக்தியுடனிருந்து வித்

தையைக் கற்றுக்கொண்டுவிடின் பிறகு நன்ருக லோக சேவை செய்யமுடியும். இந்தப் பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் தங்களுடைய நடத்தையால் மற்றப் பள்ளிக் கூடப் பிள்ளைகளுக்கு நல்ல நடத்தையைக் காட்ட வேண்டும். அவர்களுக்கு உபதேசம் செய்ய வேண்டி யதில்லை. அனுஷ்டானத்தில் காட்டவேண்டும். இந்தப் பள்ளிக்கூடம் ஆநந்தம் தருகிறது என்று ஸ்வாமிகள் சொல்லி முடித்தார்கள். பிறகு உபாத்தியாயர்களுக்குச் சில வார்த்தைகளைச் சொன்னுர்கள்.

கற்பிக்கும்போதுதான் தாங்கள் ஏற்கனவே படித்ததை மனனம்செய்ய அவசிய மேற்படுகிறதாகை யால் உபாத்தியாயர்கள் மறுமடி கற்போராகி விடுகிருர் கள். பலவிதமாக ஜீவனம் செய்யவேண்டியிருப்பதில் உபாத்தியாயர்கள் தான் தாங்கள் கற்ற வித்தையையே ஜீவனத்திற்கு வழியாக உபயோகிக்கிருர்கள், மற்ற வர்கள் படிப்பு முடிந்ததும் வேறு வேஷம் போட்டுக் கொள்ள வேண்டியவர்களாக இருக்கிருர்கள். தாங்கள் கற்பிக்கப் போகிறதை முன்னுடியே உபாத்தியாயர்கள் நன்கு ஆராய்ந்து கொண்டு விடின், பிள்ளைகள் மனதில் பதியும்படி போதிக்கச் சக்தி உண்டாகிவிடும். ஒரு வித்வான் ஒரு அரசனிடம் போய்த் தான் பாகவதம் சொல்வதாகச் சொன்ன போது, மறுபடியும் ஒருமுறை பாகவதத்தைப் படித்துக் கொண்டு வரும்படி அரசர் சொன்னுர், இப்படியே அவரை அவர் இருபத்தோரு முறை திருப்பி யடித்தார். அவர் கடைசியில் பாகவத த்தின் அந்தரங்கத்தை அறிந்து கொண்டு ஆத்மலா

பத்தைத்தேடி வனத்துக்குப்போய் விட்டார். அப்படி அவர் போய் விட்டதை அறிந்த அரசன் பிறருக்கு உபதேசம் செய்ய அப்பொழுது அவர் பக்குவமடைந்து விட்டாரென்றுணர்ந்து அவரிடம் சென்று அவர் தமக்கு உபதேசம் செய்ய வேண்டு மென்று பிரார்த்தித்து அழைத்து வந்தான், ஆகையால் படிக்கப்படிக்க உட் கருத்து வெளிப்படும், அப்பொழுது கற்பிப்பதற்கு யோக்கியதை பெருகும்.



# புண்ணிய பாவம்.

லோகத்தில் மனிதப்பிறவிக்கே பாவ புண்யங்கள் ஏற்பட்டிருக்கின்றன நாம் பாவத்தையும் செய்கிறோம், புண்யத்தையும் செய்கிறோம். புண்யத்தைச் சில சமயங்களிலேயே செய்கிறோம். அடிக்கடி மனோவாக்கு காயங்களால் பாவம்செய்கிறோம், சரீரத்தால் செய்வது தான் பாவமென்று நினைக்கக்கூடாது. மனதினாலும் வாக்கினாலும் கெடுதல் செய்கிறோம். வாக்கால் நிந்திப்பது, பொய்பேசுவது, பிறர்நோகக் கடுமையாகப் பேசுவது எல்லாம் பாவமே. இப்படி யெல்லாம் செய்கிறோமாயினும், எப்பொழுதும் புண்யமே செய்ய வேண்டுமென்று சாஸ்திரம் சொல்லுகிறது. நாமும் அப்படியே விரும்புகிறோம். தான் பாவம் செய்ய இஷ்டப்படுவதாகக் கோடி ஜனங்களில் ஒருவன்கூடச் சொல்லமாட்டான். சத்யமாக நடந்து, பரமாத்மாவின் அருளைப் பெறவே எவனும் ஆசைப்படுகிறான். நரகத்துக்குப்போக ஒருவனும் இஷ்டப் படவில்லை. ஆனால் நடவடிக்கை வேறு விதமாக இருக்கிறது. பாவத்தை மிகுதியாகவும் புண்யத்தை அல்பமாகவும் செய்கிறோம். நமது ஜன்மத்தில் பாவம் செய்ய எவ்வளவு காலத்தைச் செலவிட்டோம், புண்யத்தைச் செய்ய எவ்வளவு காலத்தைச் செலவிட்

---

(18-12-32) அன்று ஏகாம்ரேசுவரர் கோவில் தெருவில் ஸ்வாமிகள் செய்த பிரசங்கம்.

டோமென்று பார்த்தால் முந்தியது மலை போலும் பிந்தியது கடுகு போலுமே இருக்கும். எந்த தேசத்திலும், எந்த ஜாதியிலும் இப்படியே இருக்கிறது. உலகெங்கும் இப்படியே இருக்கிறது.

ஆகையால்தான் எங்கும் வியவகாரங்களும் நீதிஸ்தலங்களும் ஏராளமாக இருக்கின்றன. எல்லோரும் சத்யமாக நடந்தால் வியவகாரமே இராது. மனிதரிடம் கெட்டஎண்ணங்களும் செய்கைகளும் ஜாஸ்தியாக இருப்பதைக் கோர்ட்டுகளின் எண்ணிக்கை காட்டுகிறது. இப்படிப்பட்ட வியவகாரங்களைத் தீர்க்க சர்க்காரும் நிரம்பப் பணம் வாங்குகிறுர்கள். எதிரிக்கு நமது பாத்தியத்தை விட்டுக் கொடுத்துவிட்டால் என்ன நஷ்டமேற்படுமோ அதைக் காட்டிலும் அதிகமாகக் கோர்ட்டுச் செலவாகி விடுகிறது. முன்னுளில் இப்படியில்லை. அக்கிரமம் ஜாஸ்தியாகவாகக் கோர்ட்டுகளும் ஜாஸ்தியாகின்றன. முன்னுளில் தப்பு செய்தவர்களேயில்லையென்று நான் சொல்லவில்லை. தப்பு செய்வோர் எந்நாளிலு முண்டு. இப்பொழுது அதிகமாக விருக்கிறுர்கள். இப்படி நடவடிக்கை இருக்கிறதாயினும், ஆசை புண்யத்திலேயே இருக்கிறது. பாவம்செய்ய ஒருவரும் ஆசைப் படவில்லையாயினும், நடவடிக்கை கெடுதலாகவே இருக்கிறது. நல்ல காரியங்கள் குறைவாக இருக்கின்றன. முன்னுளில் கோயில்களைக் கட்டினர்கள். இந்தத் திண்ணையே ஒரு புண்யம். யாரேனும் தங்கி யிருக்க இந்தத் திண்ணை இடங்கொடுக்கிறது. பங்களா கட்டி வாயிலில் கதவு போட்டு விட்டால் புதிதாக வந்தவன் படுக்க இடமகப்

படாது. நம்முடைய சில்பத்தில்தான் (அதாவது வீடு கட்ட, கோயில்கட்ட விதிகள் சொல்லும் சாஸ்திரம்) புண்யத்தை உத்தேசித்து விதிகள் சொல்லப்பட்டிருக்கின்றன. திண்ணை, முற்றம், தாழ்வாரம் முதலியவைகள் பல நல்ல காரியங்களை உத்தேசித்துச் சொல்லப்பட்டிருக்கின்றன. வந்தவர்களுக்குத் திண்ணை இடங்கொடுக்கும், திட்டுக்காரன் முற்றத்தில்இருப்பன். லஜ்ஜையுடையவர்களாக இருக்கவேண்டிய ஸ்திரீகள் தனியாக இருக்க அவர்களுக்கு வேறுஅறை இருக்கவேண்டும். மேனாட்டாரில் லஜ்ஜை தீட்டுமுதலியன இல்லை. அவர்களுக்குள் அவனவன் தனித்தனி தர்மம் செய்வதுமில்லை. பல சேர்ந்து சந்தா கொடுத்து ஆதுலசாலை முதலியன வைப்பார்கள். அவர்கள் மாதிரி பங்களா கட்டிவிட்டால் தீட்டில்லை, விழுப்பில்லை. அப்பொழுது தர்மம் சாத்தியப்படாது. பத்துப் பெயர்கள் சேர்ந்து சாப்பிட பங்களாக்களில் இடமில்லை. நாலு பேர்கள் மேஜை மீது சாப்பிடவே அவர்களுடைய சில்பம் உத்தேசித்தது. புது ஏற்பாட்டில் நமது அனுஷ்டானத்திற்கு ஹானி வந்துவிடுகிறது. பங்களா கட்டினால் முதலில் திண்ணை போய்விடுகிறது. திண்ணை எல்லோருக்கும் பொது. முதலில் மற்றவர்களுக்கு ஏற்பாடு செய்து விட்டுப் பிறகே நமக்குத் தேடிக்கொள்ள வேண்டும். நம்முடைய ஆசாரங்களில் எல்லாம் இந்த எண்ணமே இருப்பதைப் பார்க்கலாம். சாப்பிடுமுன் காக்கைக்குச் சாதம் போடுகிறோம், நாய்க்குப் போடுகிறோம். ஆசார அனுஷ்டானத்தில் இன்னார் இன்ன இடத்திற்கு வரலாம், இன்னார் வரக்கூடாது என்று விதி

யுண்டு, புது ஏற்பாட்டில் அதில்லை. ஆசாரம் கடுமை என்கிறார்கள், இல்லை; இருதயத்தில் அன்புடனேயே சாஸ்திரம் விதிகளைச் சொல்லியிருக்கிறது. நமக்குக் காரணம் தெரியவில்லை என்பதற்காக ஆசாரங்களை விட்டு விடக்கூடாது. இப்பொழுது காரணந் தெரியாவிடினும் அவைகளைக் காப்பாற்றினல் பிறகு காரணம் தெரியலாம். நமது சாஸ்திரங்களை விட்டு விட்டால், பிறகு துக்கமேற் படும். மனிதப் பிறவி ஒரு சுழலாக இருக்கிறது. ஆகை யால் சாஸ்திரம் " நீ யோசனை செய்யாதே, ஒன்றன் தலையில் பொறுப்பைப் போடு " என்று சொல்லுகிறது. நாம் பேசும்போது 'வேத வாக்கு' என்கிறோம். வேத வாக்கு சத்யமென்பது நமது திட நம்பிக்கை. வேதம் சொல்லி யுள்ளபடி செய்துவிடின், நமக்குக்கவலையில்லை. கடவுளுடைய ஆணைப்படி செய்து விட்டோம் என்ற ஆறுதல் உண்டாகும்; நம்முடைய புத்தியைக் கொண்டு செய்ய நாம் பிரகஸ்பதியல்ல. சாஸ்திரப்படி செய்யத் தீர்மானமான பக்தி அதனிடத்தில் இருக்க வேண்டும்.

மிருகங்களுக்குப் புண்ணிய பாவ மில்லை. மாடு பல் தேய்க்காதது தோஷமில்லை. நமது பையன் தேய்க்காவிடில் பைத்தியமென்கிறோம். புத்தியுள்ள மனிதனுக்கே பாவமும் புண்ணியமு முண்டு. மாடு ஒருவனை முட்டிக் கொன்றுவிடின் அதற்குப் பாவமில்லை. மனிதன் கொன்றால் பாவமுண்டு. பக்தி இருந்துவிடின் பாவமோ புண்ணியமோ ஒட்டாது. தீவிரமான பக்தி வரும்வரையில்தான் புண்யபாவ வித்தியாசமுண்டு. பக்தி தீவிரமாகி விடும்போது ஆசை இராது. அப்படிப்பட்ட பக்தி சாஸ்திரத்தினிடத்தில் உண்டாக வேண்டும். சபரி

ஒரு வேட ஸ்திரீ. ஸ்ரீராமனுக்கு நல்ல பழமாகக் கொடுக்க வேண்டுமென்ற பக்தியால் கடித்துப் பார்த்து ருசியாக விருந்ததையெல்லாம் அவருக்காக எடுத்து வைத்தாள். கண்ணப்பர் ஸ்வாமி தலையில் வாய்நீரை உமிழ்ந்தார், மாம்சத்தை நிவேதனம் செய்தார். கால் செருப்பால் கண்ணை அடையாளம் வைத்துக் கொண்டார். நாம் அப்படிச்செய்யலாமா? எச்சில் பழத்தை நாம் நிவேதனம் செய்யலாமா, ஸ்வாமி தலையில் நாம் எச்சிலை உமியலாமா; பக்தி மிகுதியால் கெட்டது என்ற எண்ணம் அவர்களுடைய மனதில் படவில்லை. பக்தி பெருகிவிடின் கெட்டது செய்ய ஆசையிராது. ஏன் கெட்ட காரியத்தைச் செய்கிறோம். ஆசைதான் காரணம்; பிறகு வருந்துகிறோம். பாவம் செய்யச்செய்ய அது சகஜமாகிவிடுகிறது. பாவத்திற்குக் காரணமான ஆசையை நீக்கி பக்தியைக் கடைப் பிடிக்கவேண்டும். பக்தியால்தான் கடைத்தேறலாமென்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன, சாஸ்திரம் சொல்லாத விஷயங்களில் நமது புத்தியை உபயோகப்படுத்தலாம். சாஸ்திரம் சொல்லியுள்ள விஷயங்களில் நமது புத்தியை அப்பால் வைத்துவிடவேண்டும். திருஷ்டி, ஸ்பரிசம் முதலிய சிறு காரியங்களிலும் சாஸ்திரப்படி செய்தால் ஆத்மாவுக்கு க்ஷேமமேற்படும். இதுதான் நமது பெரியோர் ஆக்ஞை. அதை உங்களுக்கெல்லாம் சொல்லும்படி என்போன்றவர்களை ஏற்படுத்தினார்கள். இவ்விஷயங்களைப்பற்றி யோசனைசெய்து நான் சொல்வது சரியென்று பட்டால் அதை அனுஷ்டானத்தில் கொண்டுவாருங்கள்.

---

# மயக்கந்தெளிய மருந்து.

சில கோவில்களில் ஆதி சங்கரபகவத் பாதாச்சார்ய ஸ்வாமிகளின் விக்ரகமிருக்கிறது. அது சின் முத்திரை உடையதாக இருக்கிறது. கட்டை விரலின் நுனியை யும் ஆள்காட்டி விரலின் நுனியையும் சேர்த்துக் காட்டுவது சின் முத்திரை எனப்படும். இவ்விரண்டு விரல்களில் ஆள்காட்டி விரல் பகவானைக் குறிக்கிறது, கட்டை விரல் நமது ஆத்மாவைக் குறிக்கிறது. பகவத் ஸ்வரூபம் தவிர வேறில்லை என்பதுதான் சின் முத்திரை யின் அருத்தம். ஒன்றே உள்ளது என்பதைச் சின் முத்திரைக் காட்டுகிறது. மத்வாச்சாரியார் படத்தில் கையில் இரண்டு விரல்கள் தனித்தனியாக உயர்த்தப் பட்டிருப்பதைக் காணலாம். அது த்வைதத்தைக் குறிக்கிறது. அத்வைதத்தை குறிப்பிடும் சின் முத்திரை என் ஒரு விரலைக் காட்டவில்லை? ஏகமென்று காட்ட வேண்டியிருந்தால் ஒரு விரலைக் காட்டியிருக்கலாம். ஆனால் இரண்டல்லவென்று குறிப்பிடவேண்டும். ஒரு விரலைக் காட்டினால் ஒன்று என்று அர்த்தமாகும். ஆனால் அத்வைதத்தை அதாவது இரண்டில்லை என்று காட்டவேண்டியிருப்பதால் இரண்டு விரலையும் கூட்டி ஒன்றாகக் காட்டியிருக்கிறது. அத்வைதம் என்றால் இரண்டல்லாதது, இரண்டும் ஒன்றாக முடிவது என்பதே

(20-12-32 அன்று சென்னையில் தங்கசாலைத் தெருவிற் கருகில் ஏகாம்ரேசுவர் கோவில் -தெருவில் ஸ்வாமிகள் செய்த உபன்யாசம்.)

அருத்தம்; அதாவது ஆரம்பத்தில் இரண்டு, முடிவில் ஒன்று. அந்தச் சேர்க்கைக்குத்தான் யோகம் என்று பெயர். சின் முத்திரை என்பது இரண்டு விரல்களைக் கொண்டு இரண்டில்லை என்று காட்டுகிறது. பரமாத்மா என்றும் ஜீவாத்மா என்றும் எப்பொழுதும் இரண்டாகவே இருப்பதாக போதித்துள்ள மத்வாசார்யார் இரண்டு விரலைக் காட்டுகிறார்.

தோற்றம் இரண்டாக இருப்பதை நாம் ஒப்புக்கொள்ளாமலிருக்கமுடியாது. ஜகத் பல ரூபங்களை உடையதாகவே இருக்கிறது, கணக்கிட முடியாது. ஆனால் இத்தனையும் ஒன்றே என்று நமது சாஸ்திரம் சொல்லுகிறது. எல்லையற்றதெல்லாம் ஒன்றாகவே இருக்கவேண்டும் என்பதற்கு ஒரு திருஷ்டாந்தம் சொல்லுகிறேன். ஒரு கண்ணாடி இருக்கிறது. அதற்கெதிரில் மற்றொரு கண்ணாடியை வைப்போம். அந்தக் கண்ணாடியில் பார்த்தால் பிம்பங்களைக் கணக்கிட முடியாது. சுமார் ஐம்பது அறுபது பிம்பங்கள் வரையில் நாம் பார்க்கலாம். இன்னும் எத்தனையோ உண்டு. அவைகளைப் பார்க்கக்கூட நமக்குச் சக்தியில்லை. அதுதான் அநந்தம், முடிவற்றது. அநந்தமானவைகளில் ஸ்வாமி ஒருவர். அவருக்கும் அநந்தன் என்று பெயருண்டு. எல்லையற்றவர் என்பது அருத்தம். ஆகாசம் எவ்வளவு மைல் தூரமிருக்கிறது, எல்லையில்லை. எல்லையற்ற ஆகாசத்துக்குத் தேசமென்று பெயர். காலமும் தேசமும் எல்லையற்றவை. இப்படி அநந்தமாக உள்ளது வாஸ்தவத்தில் இராமல் தோற்றமாக மாத்திரம் இருக்கிறது.

அநந்தமாகப் பிரதிபலித்தது ஒரு கண்ணாடிதான். ஒன்ருக வுள்ள பொருள் பலவாகத் தோற்றுகிறது. எதிரில் வைத்த கண்ணுடியை எடுத்துவிடின் ஆதாரமான கண்ணுடி ஒன்றுதான் பாக்கியிருக்கும்; பொருள்கள் கணக்கற்றவைகளாகத் தோன்றினும் எல்லாம் ஒன்று தான் என்று இந்த திருஷ்டாந்தம் காட்டுகிறது.

ஆனுல் இரண்டில்லே என்று சொல்லுகிருேமாயினும், நமது தேசத்தில் தான் இரண்டாயிருக்தல் பலமாக இருக்கிறது. பாக்கி நாடுகளில் ஆகாரம், விவாகம், நடை உடை பாவனேகள், ஸ்பர்சம் ஆகிய விஷயங்களில் வித்தியாசமில்லே. சேர்ந்து உட்கார்ந்துகொண்டு சாப்பிடுகிருர்கள். ஒருவரை ஒருவர் தொட்டுக்கொள்ளுகிருர்கள். நமக்குள் ஒரு ஜாதிக்காரன் மற்ற ஜாதிக்காரனேத் தொட்டுவிடின் உடனே ஸ்நானம் செய்கிருன். வெவ்வேறு ஜாதியினர் கலந்து சாப்பிடக்கூடாது. தீட்டுக்காரன் தொடக்கூடாது. சிரார்த்தகாலம், பூஜா காலம் முதலிய சமயங்களில் வேறு எவனும் மேலே படக்கூடாது. கோவில்களில் குருக்கள்தான் கர்ப்பக்ருஹத்திற்குள் போகலாம். மற்றப் பிராமணர்களும் அதற்கு வெளியில்தான் நிற்க வேண்டும். இப்படி பேதங்கள் அநந்தமாக இருக்கின்றன. வெள்ளேக்காரர்களுக்குள் அப்படி யில்லே. இப்படி யெல்லாம் அவர்களுக்குள் பேதமில்லேயாயினும் ஒருவருக்கொருவர் எரிச்சல் அதிகமாகவிருக்கிறது. ஜெர்மானியரிடத்தில் பிரஞ்சுக்காரருக்கு எரிச்சல்; பிரஞ்சுக்காரர்களிடத்தில் இத்தாலியருக்கு எரிச்சல்; நாம் எப்படியிரு.

க்கிறோம். ஒரு ஊருக்கும் அடுத்த ஊருக்கும் வாய்க் கால் சண்டை என்று வைத்துக்கொள்வோம். அந்தந்த ஊரில் பல ஜாதிக்காரர்களுமிருக்கிறார்கள். ஆனால் பொதுவிஷயத்தில் எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து கொண்டு அடுத்த ஊருக்குப் போவது ஸர்வ சாதாரணமாக இருக்கிறது. வேற்றுமைகள் பல இருப் பினும் மனதில் ஐக்கியமிருக்கிறது. மனதில் வேறு பாடில்லை. ஒரு பிராமணன் ஒரு வைசியருடைய வீட் டிற்குச் சாப்பாட்டுக்காகப் போய்விடினும், அந்த ஊரி லுள்ள ஒரு பிராமணன் வீட்டிற்கு அவரை அனுப்பி அந்த வைசியர் சாப்பாடுசெய்து வைக்கிறார். இன்றள வும் இந்த ஒற்றுமை இருந்துவருகிறது. வெள்ளைக்காரர் களுக்குள் சேர்ந்து சாப்பிட்டாலும், விவாகத்திற்குத் தடையில்லை யாயினும், மன ஒற்றுமையில்லை. நமக்குள் இத்தனை த்வைதத்தில் அத்வைதம் இருக்கிறது. அத் வைதம் என்ற சொல் ஜீவ பிரும்ம ஐக்கியத்தையே சொல்லுகிறதாயினும், அந்தச் சொல்லை இந்தச் சந்தர்ப் பத்திற்கு உபயோகித்துக்கொண்டேன். மற்ற தேசங் களில் தொட்டுக்கொள்ளுதல் முதலிய காரியங்களில் பேதமில்லை, மனதில்தான் பேதம்

இது நிற்க, இனி அத்வைதத்தைக் கவனிப்போம்.

உலக முழுமையும் பரமாத்மாதான் என்று சாஸ்தி ரம் சொல்லுகிறது. நாமே பரமாத்மா என்று சொல்வது ஒரு அகம்பாவமல்லவா? மற்ற மதங்களில் பகவானின் அருள் பிரார்த்திக்கப்படுகிறது, நாம் எல்லாருமே ஸ்வாமி என்பது உசிதமாயில்லை என்று சிலர் சொல்லுகிறார்கள்.

ஆனால் சாஸ்திரம் என்ன சொல்லுகிறது? பரமாத்மா தான் எங்கும் நிறைந்திருக்கிறார், அவர் தவிர வேறில்லை என்று சாஸ்திரம் சொல்லியிருக்கிறது. அவர் தவிர வேறு ஒன்றிருப்பின், பல சாமான்களில் அவர் ஒன்றாகி விடுவர். எல்லாம் அவராகிவிடும்போது, நாம் மாத்திரம் வேறாக இருப்பதற்கில்லை. ஆனால்நாம் என்று ஒன்று தோன்றுகிறது, அதையும் பரமாத்ம ஸ்வரூபத்தில் கரைத்துவிடவேண்டும். நம்மிடத்தில் குழந்தை அன்பா யிருக்கிறது. அது க்ஷேமமாக இருப்பின், நம் பாடு எப்படி யேனும் ஆகட்டும்மென்று நினைக்கிறோம். அப்படியே அந்த மங்கள ஸ்வரூபமிருந்தால் போதும், அதில் இதைக் கரைத்துவிட வேண்டும்; நாம் என்பது வேறாக இல் லாது போவதுதான் அத்வைதம். பழுதையைப் பாம் பென்று நினைத்தோம். பாம்பு இல்லை என்று தெரியும் போது பழுதை தான் இருக்கிறது. அப்படியே நாம் இல்லையானால் உள்ளது பரமாத்மாதான். அத்வைதத் தில் அகம் பாவம் தொலைகிறது. நாம் என்பது போய் விடுகிறது. எல்லாம் பரமாத்மாவாகிவிடுகிறது. தொலை யாததில் தொலையக்கூடியது எல்லாம் போய்விடுகிறது. அவர் தான் விஷ்ணு, சிவன், பரமாத்மா, இதுதான் அத்வைதம்.

அப்படியானால் நாம் என்ன செய்யவேண்டும். தேகத்தை நாம் என்று நினைத்துக்கொண்டிருக்கிறோம். நகத்தைக் கிள்ளிவிட்டால் அது வேறாகிவிடுகிறது. மயிர், மாம்சம் முதலியன அப்படியே; அவை நாமாகத் தோன்றுகின்றன. நாம் அல்லாத வஸ்துவை நாம்

என்று; நினைத்துக்கொண்டிருக்கிற எண்ணம் போக வேண்டும்; பரமாத்மாதான் நிஜமான நாம். தேகம் நாம் என்கிற பாவம் போகவேண்டும். மனது குரங்கு; வேறு ஒன்றைக் கொடுத்தால்தான், அது கையி லுள்ளதை விடும், இந்த சரீரம் அழுகல்; இந்த ஆபா சத்தை நாம் என்று மனது நினைத்துக்கொண்டுவிட்டது. நாம் பரமாத்மா என்று அது நினைக்கும்படி செய்ய வேண்டும். உண்மையில் நாம் என்ற வஸ்து கத்தி யால் வெட்டினால் வெட்டப்படமாட்டாது, நெருப் பில் போட்டால் எரியாது, ஜலத்தில் அழுகாது. அந்த வஸ்துவை நாம் என்று நினைத்துக்கொண்டுவிட வேண்டும். ருசியான வாழைப்பழத்தைக் குரங்குக்குக் கொடுத்தால் கையிலுள்ள அழுகலை அது எறிந்துவிடும். மதுரமானது பரமாத்ம வஸ்துதான். அந்த ருசி வந்து விடின் கடமையை மாத்திரம் செய்யவேண்டும் என்று தோன்றும், அப்பொழுது சரீர அபிமானம் போய் விடும். பல பெரியோர்கள் சில வருஷங்கள் தியானத் தில் இருந்ததாக நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். அந்தத் தத்துவத்தை அறிந்துவிடவேண்டும். எல்லா வஸ்துக்களும் நாம் என்று நினைத்துக் கொண்டுவிட வேண்டும். அகம் போய்விடும்போது அகம்பாவமும் போய்விடும். அகம் என்றால் நான் என்று அருத்தம், அதற்காக பகவானுக்கு நமது காலத்தை அர்ப்பணம் செய்யவேண்டும். அவரைத் தியானம் செய்யவேண் டும். நமது பொருளையும் அர்ப்பணம் செய்யவேண் டும். ஆனால் சிலர் இதைப்பற்றி ஆட்சேபிக்கிறார்கள்.

கோவில்களில் அபிஷேகம் செய்யும் பால் முதலியன நஷ்டமாகிவிடுகிறதென்கிறார்கள். வயிற்றில் போனால் பசி அடங்குகிறது என்கிறார்கள். நாம் பகவான் என்ற எண்ணம் வந்துவிடின், இவையெல்லாம் நஷ்டமாகத் தோன்றுது. சில சினேகிதர்கள் தாங்கள் உடல் வேறாயினும் உயிர் ஒன்று என்கிறார்கள். குழந்தைக்கு அசௌக்கியம் வந்துவிடின் நாம் தூக்கத்தை லக்ஷியம் செய்வோமா, பணத்தை லட்சியம் செய்வோமா? ஒருவரிடத்தில் பிரியம் வரும்போது எல்லாவற்றையும் அவருக்கு அர்ப்பணம் செய்கிறோம். ஸ்வாமிக்குப் பொருள்களை அபிஷேகம் செய்து எதற்காக வீணாக்குகிறது என்று நினைக்கையில், பணம் பெரிதாக நினைக்கிறோம். வாஸ்தவ அன்பு வந்ததற்கு அடையாளம் தனது பொருளை அர்ப்பணம் செய்வதே. குழந்தைக்காக ஏன் செலவிடுகிறோம் என்று ஒருவர் சொன்னால் அது தகப்பன் காதில் விழாது. பக்தி முக்திக்குப் பூர்வாங்கம். நமது தேகம், வாழ்நாள், பொருள் ஆகியவற்றை பகவானுக்கு அர்ப்பணம் செய்யவேண்டும். ஆழ்வார்களும் நாயன்மார்களும் அப்படியே செய்தவர்கள். பணத்தை அர்ப்பணம் செய்ய வேண்டுமென்று எண்ணம் வந்துவிடின் அது நஷ்டமாகிறது என்ற எண்ணமிராது. பணம் பெரிது என்று நினைக்கிறவரையில் இவன் கடைத்தேறமாட்டான். முன்னாளில் தாங்களும் வாழ்ந்து கொண்டு கோவில்களும் கட்டினார்கள். கோவில் கட்டினதற்குக் காரணம் சொத்தைக் காட்டிலும் பகவானைப் பெரிதாக நினைத்ததே. சிற்பிகள் தங்களுடைய

வித்தையைத் தங்களுடைய வீட்டில் உபயோகிக்கவில்லை, கோவில்களில் உபயோகித்தார்கள். கவிகளும் அப்படியே செய்தனர். பணக்காரர்கள் கோவில் கட்டினார்கள். பகவானுக்கு அதனால் லாபமில்லை, கட்டினவன் கடைத்தேறினான், உலகிற்கு வழியுங் காட்டினான். பகவானுக்கு எதையும் அர்ப்பணம் செய்ய வேண்டும். அதில் ஒரு பங்கு தர்மம் செய்யவேண்டும். இப்பொழுது அவரவர் சம்பாத்யம் அவரவர் செலவிற்குப் போதவில்லை. ஆகையால் ஒரு தர்மமும் சாத்தியப்படவில்லை. முன்னாளில் ஏராளமாகத் தர்மம் செய்துவந்தனர். இப்பொழுதும் நகரத்துச் செட்டியார்கள் செய்கிறார்கள். எவ்வளவு சம்பாதித்தாலும் கஷ்டம் வருகிறது. தானம் கொடுத்த பணம் இருந்தால் சாப்பிடலாமே என்று தோன்றுகிறது. அது கொடுபடாதிருந்தால் அதுவும் போயிருக்கும். லோகமெல்லாம் ஒன்றாகிவிட்டதால் இப்படியாகிவிட்டது. முன்னாளில் 50 வருஷங்களுக்கு ஒரு பஞ்சம். இப்பொழுது லோகமுழுமையிலும் நித்யம் பஞ்சம், ஆயினும் சாத்தியப்படும்வரையில் பகவானுக்கு அர்ப்பணம் செய்யவேண்டும். அதுதான் பரம லாபம். பொருள் உடல் மனஸ் வாக்கு இவைகளைக் கொடுக்கவேண்டும். இந்த ஒற்றுமை இருந்தால் எவ்வளவு பேதமிருந்தாலும் அந்தரங்க அன்பிருக்கும். பணம் வெளிப்பிராணன்; வெளியில் ஸஞ்சாரம் செய்வது அது. அதையும் கொடுக்கவேண்டும்.

தினமும் 5 நிமிஷம் பகவந் நாமஸ்மரணம் செய்யுங்கள், ஒரு சிறிய தர்மம் செய்யுங்கள். ஒவ்வொரு

வரும் சிறிது தர்மம் செய்தால் லோகத்தில் பல ஜனங்களின் கஷ்டம் நிவர்த்தியாகிவிடும். ஆயிரம் பெயர் சேர வேண்டிய தில்லை. பொருளினுலும் பகவத் கைங்கரியம் செய்ய வேண்டும்.



# சதுர்வித புருஷார்த்தங்கள்.

## அறம், பொருள், இன்பம், வீடு.

(18-1-33) இரவில் சென்னை முத்தியாலுபேட்டையில் ஸ்ரீ கச்சபேசுவரர் அக்கிரஹாரத்தில் தர்ம சிவாச்சாரியார் மடத்தில் செய்யப்பட்ட உபன்யாசம்.

நமது பெரியோர் நாம் அடையவேண்டிய பொருள் நால்வகைப்பட்டது என்று சொல்லியிருக்கிறார்கள். அவை தர்மார்த்த காமமோட்சம் எனப்படும். தமிழாசிரியர்கள் அறம் பொருள் இன்பம் வீடென்பர். நான்குக்கும் வடமொழியில் புருஷார்த்தங்கள் என்று பெயர். புருஷார்த்தம் என்றால் புருஷர்களால் அதாவது மனிதர்களால் வேண்டப்படுவது என்று அர்த்தம். இந்த நான்கும் புருஷர்களால் ஏன் வேண்டப்படுவன என்பதைக் கவனிப்போம். சில தெருக்களில் ஜனக் கூட்டமும் வண்டிக் கூட்டமும் அதிகமாகவிருக்கும். பல ஊர் ஜனங்கள் கூடியிருப்பார்கள். எதற்காக? தங்களுக்கு வேண்டிய ஒரு காரியத்திற்காக. அவர்கள் விரும்புவது அர்த்தம், அதாவது பொருள்; உத்தியோகம், வியாபாரம் முதலிய வேலைகளினால் அவர்கள் கூடியிருப்பினும் லட்சியம் பொருள்தான். அது மனிதர்களால் வேண்டப்படுவது. அப்படியே மற்ற மூன்றும் வேண்டப்படுவனதான். பொருள் சம்பாதிப்பது கஷ்டம்.

சம்பாதிக்கும் காலத்தில் சுகமில்லை; நித்திரையில்லாமல் ஆகாரமில்லாமல் மான அவமானமில்லாமல் சம்பாதிக்கிறார்கள். ஆகையால் பொருளிடத்தில் ஆசை அதிகமிருக்கிறது.

மாலையில் கடற்கரைக்குப் போகிறார்கள். பொருளுக்காகவல்ல, இன்பத்துக்காகப் போகிறார்கள். அதுவும் ஒரு புருஷார்த்தம். திருப்பதி மலையில் இரவும் பகலும் 56 தேச ஜனங்களையும் காணலாம். அங்கு அறத்திற்காகப் போகிறார்கள். திருவள்ளுவ நாயனார் முதலிய பல பெரியோர்கள் சைவர்களாயினும் வைதீக மதத்தை யனுசரித்தவர்களே. அவர்கள் எந்த பாஷையில் எழுதியிருப்பினும், புருஷார்த்தங்களை நான்காகவே வகுத்திருக்கிறார்கள். திருப்பதிக்குச் செலவு செய்து கொண்டு கஷ்டப்பட்டுக்கொண்டுபோவது அறத்திற்காக என்று சொன்னேன். திருவண்ணாமலையில் சேஷாத்திரி ஸ்வாமிகள் என்று ஒரு மகான் இருந்தார். இப்பொழுது ரமணஸ்வாமிகள் இருக்கிறார். காசியில் பாஸ்கரானந்தர் என்று ஒரு பெரியவர் இருந்தார். குடந்தையில் மௌனஸ்வாமிகள் இருந்தார். அவர் கண் கொட்டினதில்லை, தூங்கினதில்லை, அசைந்ததில்லை, பக்தர்கள் சிறிது ஆகாரத்தை வாயில் வைப்பார்கள். இரண்டு மூன்று நாள் அங்கேயே அது இருக்கும், பிறகு அதை எடுத்துவிட்டு வாயைச் சுத்தம்செய்து வேறு ஆகாரத்தை வைப்பார்கள். இப்படிப்பட்டவர்கள் மோட்ச நிலையை அடைந்தவர்கள். தமக்கும் அது வேண்டும் என்று ஆசைப்பட்டு மனிதர் அவர்களிடத்தில்

பக்தி செய்கிறார்கள். முற்காலத்தில் 1008 சிவாலயங்கள் இருந்தன. இப்பொழுது சுமார் 200 இருக்கின்றன. அவைகளைத் தரிசிக்க யாத்திரை போகிறார்கள். மோட்சவிருப்பமே அதற்குக் காரணம். நாடகசாலைகள் கண்காட்சி முதலிய விடங்களுக்குப்போவது இன்பத்திற்காக. அங்கு அனுபவிக்கும் இன்பம் உடனே போய்விடும். பெரியோர் சேவை, குளம் வெட்டுதல், தானதர்மம் செய்தல் முதலியன அறம். ஆத்ம நிஷ்டை, யோகம் முதலியன மோட்சத்திற்குச் சாதனங்கள். மற்ற மதங்களில் புருஷார்த்தங்களை இப்படிப் பிரிக்கவில்லை. பௌத்தம் முதலியவற்றில் புருஷார்த்தங்கள் இப்படிப் பிரிக்கப்படவில்லை. இப்படிப்பட்ட புருஷார்த்தங்களில் எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடியன பொருளும் இன்பமும். அவை வேண்டாமென்று சொல்வோர் இல்லை; அறமும் வீடும் சிலர் ஒப்புக்கொள்ளுவர், சிலர் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். 20 வயதுக்கு மேற்பட்டு 40 வயது வரையில் அறத்தில் பிரவர்த்தி யில்லை. 18 வயதுக்குக் கீழ்ப்பட்டவர்கள் கோவிலுக்குப் போக வேண்டுமென்று பிரியப்படுவர். அதற்குக் காரணம் தாயிடத்திலுள்ள அன்பு. தாய்மாருக்கு அறத்தில் பிரியம் அதிகம். அவர்களிடத்தில் பழகுவதால், சிறு குழந்தைகளாக இருக்கையில் கடவுள் வணக்கமும் பெரியார் வணக்கமுமிருக்கும்.

16 வயது வந்துவிடின் தன் பிள்ளையாயினும் நண்பனாக நினைக்க வேண்டும். அதாவது அவர்களை அதிகாரம் செய்யக்கூடாது. 16 வயது வந்துவிடின்

அவர்கள் ஆலோசிக்க ஆரம்பிப்பார்கள். தாய் தகப்ப னிடம் அன்பு கொஞ்சங் கொஞ்சமாகக் குறையும். கன்றுகளும் அப்படியே. 16-வயது முதல் பெற்றோரிடம் ப்ரீதி கொஞ்சங் கொஞ்சமாகக் குறையும். கடமை மாத் திரமே பெரிதாகத் தோன்றும். அறத்திலோ வீட்டிலோ ஆசை இராது- 16 வயதுக்கு முன் பக்தி யிருக்கும். 50 அல்லது 60 வயதுக்கு மேற்பட்டவர்கள் கோவில் வேண்டாம், ஸ்வாமி வேண்டா மென்று சொல்லமாட் டார்கள். 16 வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு மோட்சத்தில் பிரிய மிராது, அறத்தில்தான் பிரியமிருக் கும். வயதான காலத்தில்தான் அனுபவத்தால் அறிவுண்டாகும். ஈசுவர தத்துவஞானம், பக்தி முதலி யன புத்தகப் படிப்பினால் வந்துவிடாது. பூரண அனு பவத்தாலேயே வரும். அனுபவத்தால் சஞ்சல மொழிந்து தெளிவேற்படும். ஒரு உதாரணத்தைக் கவனிப்போம். ராமேசுவரத்தில் ஸ்ரீ ராமன் கட்டின அணை 20 மைல் நீளம் இருக்கிறது. இரண்டு பக்கத்திலும் சமுத்திரம். வடக்குச் சமுத்திரத்தில் ஐப்பசிமுதல் அலை ஜாஸ்தி. தெற்குச் சமுத்திரத்தில் தென்றல் காலத்தில் அலை அதிகம், சில மாதங்களில் வடசமுத்திரம் குளம் மாதிரி இருக்கும். அதில் அலை புரள்வதும் அடங்குவதும் போல் நமது மனதின் அலையும் புரளும். பொருளுக்கும் இன்பத்துக்கும் காலமாகிய 16 வயது முதல் 50 வயது வரையில் பெரிய அலைகள் அடித்து அனுபவ மேற்பட்டுப் பிறகு சாந்தி யேற்படும். பால்யத்திலும் தேக அசௌக்கியமாகிவிடின், தெய்வத்துக்குப் பிரார்த்

தனை செய்து கொள்வன், இனிமேல் யோக்கியனாக இருப்பதாகப் பிரதிக்ஞை செய்து கொள்வன். ஆனால் உடம்பு சரியானவுடன் பழையபடி நடக்க ஆரம்பித்து விடுவன். இந்த அலைகளால் ஆறுதலும் சாந்தியும் ஏற்படமாட்டா. ராமேசுவரத்தில் அக்னி தீர்த்தம் என்பது கடலின் ஒருபாகம். அங்கு அலையில்லை. அடியில் கல் தெரியும். அப்படி மனம் அடங்கினால்தான் புத்தித் தெளிவு உண்டாகும். அடக்கம் தெளிவைத்தரும். கோபத்தில் தெளிவுண்டாகாது. வயது முதிர்ந்த காலத்தில் அடக்கமும் வணக்கமும் வரும். அப்பொழுதும் சிலருக்கே வரும். மாதுர் மான், பிதுர்மான், ஆசார்யமான் ஆகியவர்களுக்கு அவை வருமென்று சாஸ்திரம் சொல்லுகிறது. ஒரு பெரியவர் வந்ததாக வைத்துக்கொள்வோம். அவருடைய குணம் ஆச்சரியமாக இருந்தது. தாயார், தந்தை, குரு ஆகிய மூவரையும் உடையவர் மாதிரி தாங்கள் இருக்கிறீர்கள் என்று அவரைப் பார்த்து ஒருவர் சொன்னார். தாய் சொல்படியும் தந்தை சொல்படியும் குரு சொல்படியும் நடந்து வந்தவர்கள் குணத்தில் சிறந்தவர்கள் என்பது தாத்பரியம். எப்படிப் பட்டவனுக்கும் ஒரு குரு இருக்கத்தான் இருப்பார்; எவரேனும் சிறிது அறிவைப் புகட்டியிருப்பர். தாய் தந்தையரும் எல்லோருக்குமுண்டு. அப்படிப்பட்ட குருவையும் தாய் தகப்பனையுமுடைய ஒவ்வொருவனும் குணத்தில் சிறந்தவன் என்பது கருத்தல்ல. தாயும் தகப்பனும் குருவும் இருந்திருப்பது மாத்திரம் போதாது. தாயாரால் முதலில் நல்வழியில் பழக்கப்பட்டு, பிறகு

தகப்பனிடத்தில் ஒப்புவிக்கப்பட்டு, அவரால் நல்வழியில் பழக்கப்பட்டு, ஸத்குருவிடத்தில் ஒப்புவிக்கப்பட்டு அவரால் பழக்கப்பட்டிருக்கவேண்டும்.

இக்காலத்தில் தாய் தகப்பன் பழக்கமேயில்லை. சிறுவயதிலேயே படிப்பதற்காக குழந்தைகளை வேறிடங்களுக்கு அனுப்பிவிடுகிறார்கள். குருவிடத்திலும் அன்பில்லை. உபாத்தியாயர் பணம் பெற்றுக்கொள்வதால், வேலைக்காரர் மாதிரி பிள்ளைகள் அவரைப் பாவிக்கிறார்கள். முன்னாளில் குருபக்தி அதிகமாக விருந்தது. எந்த சாஸ்திரத்தை அப்யஸித்தவர்களும் குரு சிசுருஷை செய்து வந்தார்கள். இக்காலத்தில் அதெல்லாம் போய், வணக்கமில்லாமல் தான் நினைப்பதே சரியென்ற நினைப்புண்டாகிவிடுகிறது. அனுபவஸ்தர்களைக் கேட்டுத் தெரிந்துகொள்வோம் என்ற நினைப்புவேண்டும். அப்படித் தெரிந்துகொள்ளும் வழிகளில் ஒன்று வாதம் எனப்படும். வாதம் முதலிய மூன்று வழிகளுக்கு மொத்தமாகக் கதை என்று பெயர். வாதம், ஜல்பம், விதண்டை என்பன. நமக்குத் தெரியாத ஒரு விஷயத்தைத் தெரிந்து கொள்வதற்காகப் பிறரிடத்தில் பேசுவது வாதம். இக்காலத்தில் அது தப்பருத்தத்தில் உபயோகிக்கப்படுகிறது. ஜல்பம் என்பது மற்றவர் சொல்வது பிசகென்று காட்டி, தான் சொல்வதை நிலை நிறுத்துவது. விதண்டை என்பது பிறர் என்ன சொன்னாலும் அது தப்பென்று காட்டப் பேசுவது; அது பாபமான செய்கை. அனுபவமானது வயது சென்றவர்களுக்கே எற்படக்கூடியது. அக்காலத்தில் தான்

தெளிவேற்படும், அப்படித் தெளிவடைந்தவர்கள் சத் விஷயங்களைச் சிறுவர்களுக்குப் போதிப்பார்கள். இப்பொழுது அப்படிப்பட்ட வழக்கங்கள் மிகக் குறைந்து விட்டன. கோவிலுக்குப் போகிறவர்களைக் காட்டிலும் கடற்கரைக்குப் போகிறவர்களே அதிகம். வயதாகியும் ஸத் விஷயங்களில் பிரவர்த்தியுள்ளவர்கள் குறைவாகவே இருக்கிறார்கள். ஆகையால் தர்மம் இருக்க இடமின்றித் தத்தளிக்கிறது.

மோட்சமென்பது ஈசுவர சரணங்களை அடைவது. தர்மத்திலும் மோட்சத்திலும் பிரீதி அனுபவத்தினால் உண்டாகும். பொருளிலும் இன்பத்திலும் இளமையில் பிரீதி உண்டாகும். மனிதர் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கினையும் ஒவ்வொரு நிலைமையில் விரும்புகிறார்கள். பொருளும் இன்பமும் வேண்டாமென்று விட்டுவிட்டால் அறம் சாத்தியப்படமாட்டாது. அறமன்னியில் மோட்சம் துர்லபமானது. ஆகையால் பொருள் முக்கியமாக இருப்பதால் தான் திரைகடலோடியும் திரவியம் தேடு என்றார். இப்படிச் சொன்னது வைசியர்களை உத்தேசித்தே; ஒவ்வொரு வர்ணத்திற்கும் ஒவ்வொரு பிரவர்த்தி முக்கியம். பிராமணர்கள் கர்மானுஷ்டானங்களில் தவறக்கூடாது. கர்மானுஷ்டானங்கள் மோட்ச இச்சையை உண்டாக்கும். மோட்சத்தில் பிரீதி உள்ளவர்களும் பொருளையும் இன்பத்தையும் உதாசினம் செய்யக்கூடாது. அவைகளை உதாசினம் செய்தால் உலகம் நிந்திக்கும். லோக நிந்தனை அறஞ்செய்வது சாத்தியப்படாமற் செய்யும். ஆகையால்

அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்குமே முக்கியம். நாலிலும் சிறந்தது மோட்சம். அதற்கு ஆதாரம் அறம். அதற்கு அவசியம் பொருள்; அது இன்பத்தையும் தரும். புருஷார்த்தங்களில் சிறந்த வீடு கருணாநிதியாகிய இந்துசேகரனது அனுக்கிரஹத்தால் கிடைக்கும். நாம் வெளியில் சுற்றுங்காலத்திலும் நமது வீட்டைப்பற்றிய நினைப்புடையவர்களாகவே இருக்கிறோம். அப்படியே எத்தொழில் புரியினும், மோட்சமாகிய வீட்டை நினைத்துக்கொண்டே இருப்போமானால் அது கிடைக்கும். ஈசுவர சரணமே நம்மைக் கரையேற்றும். அதைப் பிடித்துக்கொள்ள வேண்டுமென்று நினைக்கிறேன். நான் சொல்வது உசிதமானதா என்று யோசனைசெய்து உசிதமென்றுபட்டால் பல ஜோலிகளிருக்கையிலும் பகவானைத் தியானஞ் செய்யுங்கள்.



# அரநாமம் சூழ்க.



19-1-32 முத்தியாலுப்பேட்டை அரண்மனைக்காரத் தெருவிலுள்ள ஸ்ரீ கச்சபேசுரர் ஆலயத்தில் செய்த உபந்யாஸம்.

நமது மதஸ்தர்கள் கூட்டமாகச் சேர்ந்திருக்கும் போது பலர் பேசுவதால் சப்தம் நிறைந்திருக்குமானால் மௌனத்தை உண்டாக்க ஒரு சுலபமான வழி இருக்கிறது. கும்பல் அதிகம், பேச்சு நிறைந்திருக்கிறது, இதில் ஒருவர் சொல்வதை எல்லோரும் கேட்கும்படி செய்தாகவேண்டும். அப்படிப்பட்ட சமயங்களில் ஹர ஹர மகாதேவ என்று ஒருவர் உரக்கச் சொன்னால் எல்லோரும் அதைச் சொல்லுவார்கள். அப்பொழுது பேச்சு நின்றுவிடும். அந்த சமயத்தில் அவர்களுக்கு எதையோ சொல்லவேண்டியவர் பேச இடமேற்பட்டு விடுகிறது. ஹர ஹர மகாதேவ என்ற நாமாவளி ஜனங்களை ஒருமைப்படுத்திவிடுகிறது. தேசத்தை ஒருமைப்படுத்தவும் அதுதான் வழி; லோகத்தை ஒருமைப்படுத்தவும் அதுதான் வழி. லோகத்தில் முதலாளிகளுக்கும் தொழிலாளிகளுக்கும் பரஸ்பரவிருத்த மேற்பட்டு விடுகிறது. ராஜாங்கத்திற்கும் பிரஜைகளுக்கும் வருத்த மேற்பட்டுவிடுகிறது, பெரியோருக்கும் சிறியோருக்கும் சண்டை. பணக்காரருக்கும் ஏழைக்கும் சண்டை, ஜாதிக்கும் ஜாதிக்கும் துவேஷம், மதத்திற்கும் மதத்திற்

கும் துவேஷம். இப்படி யெல்லாம் பாஸ்பர விரோத மன்னியிலிருக்கவே எல்லோரும் ஆசைப்படுகிறுர்கள். கூட்டத்தில் அமரிக்கையுடன் இருக்கவே ஒவ்வொரு வனும் இஷ்டப்படுகிறுன்; ஆனல் ஒவ்வொருவனும் அடுத்தவனை இடிக்கிறுன். பேசாதே என்று கூச்சல் போடுகிறுன். எல்லோர் போடும் கூச்சல் இடிமுழக்க மாகிவிடுகிறது. அப்படிப்பட்ட சமயத்தில் ஒரு நாமா வளி ஒழுங்கை உண்டாக்கிவிடுகிறது. லோக வியவ காரங்களிலும் பகவானிடத்தில் பக்தி உண்டாகிவிடின் அவனிடத்தில் பக்தியுள்ள மற்றவர்களிடத்திலும் பிரீதி ஏற்பட்டுவிடும். அப்பொழுது மாச்சரிய மேற்பட முடியாது. ஆகையால் லோகக் கட்சிகளை ஒழிக்கவும் பக்தி வரும்படி உபதேசம் செய்யவேண்டும். பேரிரைச் சலைப்போக்கி நிச்சப்தத்தை உண்டாக்கிவிட்ட இந்த "ஹர ஹர மகாதேவா" வை யார் நமக்குச் சொல்லிக் கொடுத்தார்கள்? நமது பெற்ருேரன்று. பரம்பரையாக அது வந்துகொண்டிருக்கிறது. பிரபஞ்சத்தில் ஹர ஹர நாம சப்தம் நிறைந்துவிடின் துவேஷமொழிந்து போகும். ஹரனை பக்திசெய்து மோட்சமடைந்த 63 நாயன்மார்களுடைய விக்ரஹங்களைச் சிவாலயங்களில் காண்கிருேம். அவர்களைக் காண்பதால் நமக்கும் சிவப் பிரஸாதம் கிடைப்பதற்குக் காரணமான பக்தி வரட்டு மென்று விக்ரஹங்களை வைத்திருக்கிறுர்கள். சிவ பக்தர் களில் நால்வர் சமய குரவர்கள் என்று சொல்லப்படுகிறுர் கள். அவர்களில் ஒருவர் அப்பர். வாகீசர் என்று வடமொழியில் அவருக்குப் பெயர். அதாவது திரு நாவுக்கரசு. சுந்தரர் ஒருவர், சம்பந்தர் ஒருவர், மணி

வாசகப்பெருமான் என்ற மாணிக்க வாசகர் ஒருவர். சம்பந்தஸ்வாமி ஒரு சமயத்தில் ஒரு வாழ்த்துப் பதிகம் பாடினார்கள். நாயன்மார் விக்ரகங்களில் சிறு குழந்தையாகக் கையில் தாளம் வைத்துக்கொண்டிருப்பதே சம்பந்தஸ்வாமி. 16 வயதுதான் அவர் இந்த லோகத்தில் இருந்தார். அம்பாளுடைய க்ஷீரத்தையே சாப்பிட்டு ஞானத்தின் சம்பந்தம்பெற்று, உடனே "தோடுடைய செவியன்" என்ற பதிகத்தைப் பாடினார். பரமேசுவரனே அவருக்குப் பொற்றாளம் கொடுத்தார். பொற்றாளமுடையார் கோயில் என்று சீர்காழியில் இருக்கிறது. பொற்றாளத்தில் ஓசை நிறைந்திராதாகையால் அதில் ஓசை நிறைந்திருக்கும்படி அம்பிகை அனுக்கிரஹம் செய்தாள். ஆகையால் அம்பாளுக்கு அங்கு ஓசைநாயகி என்று பெயர் வழங்குகிறது. ஈசுவரினிடமிருந்து அவர் முத்துச்சிவிகையும் பெற்றார். கும்பகோணத்திற்குத் தெற்கிலுள்ள பட்டீச்சுரம் என்ற க்ஷேத்திரத்தில் முத்துச்சிவிகையில் சம்பந்தரைப் பகவான் நேரில் பார்ப்பதற்காக துவஜஸ்தம்பமும், நந்திகேசுரரும் சந்நிதிக்கு நேராகவிராமல் ஒதுங்கியிருக்கின்றன. இப்பொழுதும் அந்த க்ஷேத்திரத்தில் முத்துப்பந்தல் உற்சவம் கொண்டாடப்படுகிறது. இன்றும் அவர் பெயரைச் சொல்லிக்கொண்டு தேவாரம் ஓதப்படுகிறது. இவ்வூரில் ஆயிரவர் செட்டிமார்கள் ஒரு தேவாரப் பாடசாலையை நன்கு நடத்திவருவது சந்தோஷமாக இருக்கிறது. இந்தத் திருஞானசம்பந்தர் ஒரு சமயத்தில் மதுரைக்குப்போய் பாண்டிநாட்டை

சமணத்திலிருந்து காப்பாற்றவேண்டிய அவசியம் ஏற்பட்டது. பாண்டி ராஜன் சமணர்களின் கொள்கைகளில் ஈடுபட்டுவிட்டான். சமணர்கள் வேதத்தையும் வைதீக அனுஷ்டானங்களையும் நிராகரித்தவர்கள். அவர்களின் வசமாகிவிட்ட ராஜா கோவிலுக்கு ஜனங்கள் போகக்கூடாது, விபூதி ருத்திராட்சம் தரித்துக்கொள்ளக்கூடாது என்று உத்தரவு செய்துவிட்டான். ராஜாவின் பட்டமகிஷியாகிய மங்கையர்க்கரசியாரும் மந்திரி குலச்சிறையாரும் மகாசிவ பக்தர்கள். அரசன் அறியாதபடி அவர்கள் விபூதி ருத்திராட்சம் தரித்துக்கொண்டும் சிவபக்தி செய்துகொண்டு மிருந்தார்கள். இந்த மங்கயர்க்கரசியார் 63 நாயன்மார்களில் ஒருவர். ஸ்திரீ பக்தர்களில் காரைக்கால் அம்மையாரும் ஒருவர். அவர் பாடியுள்ள பதிகங்களில் தம்மைக் காரைக்கால் பேய் என்றே சொல்லிக்கொண்டிருக்கிறார். [காடுமலிந்தகனல் வாயெயிற்றுக் காரைக்காற்பேய்தன் பாடல்பத்தும்பாடியாடப் பாவநாசமே] ஈசுவரனால் கிடைக்கப்பெற்ற ஒரு மாம்பழத்தை அவருடைய கணவன் புசித்து அதன் தெய்வீகத்தை உணர்ந்தும் "ஈசுவரன் கொடுக்கவாவது" என்று சந்தேகப்பட்டான். அப்பொழுது அம்மையார் பரமசிவனை வேண்டி மற்றொரு பழம் பெற்றுப் புருஷனுக்குக் கொடுக்க அவன் தான் செய்த அபசாரத்தையும் தன் மனைவியாரது பெருமையையு முணர்ந்து மனதில் அவரைப் பெரியாராகப் பாவித்து நமஸ்காரம் செய்துவிட்டான். இப்படி இல்லறத்திலிருந்து விடுதலைபெற்ற அம்மையார் தமது

இளமையும் எழிலும் சிவபக்தி செய்வதற்கு இடையூருக விருக்குமென்றுணர்ந்து தமக்குப் பேய்வடிவம் தரும்படி வேண்டி அதைப் பெற்ருர். நாம் அழகு வேண்டு மென்று பிரார்த்திப்போம், அவர் அதைத் துறந்தார். அவரைப்போன்ற பெரிய பக்தர் மங்கையர்க்கரசியாரும். வேதங்கூடாது, சிவபக்திகூடாது என்ற கோட்பாடு டைய சமணர் வசப்பட்டு அரசன் சைவத்தை இம்சித்து வந்ததை மங்கையர்க்கரசியார் பொறுக்கமுடியவில்லை. நமது ஸ்திரீகளுக்குத்தான் மதப் பற்றதிகம். அப்ப ருடைய தமக்கையார் திலகவதியார் என்றிருந்தார். அப்பர் மறு மதத்தில் சேர்ந்துவிட்டார். திலகவதியார் அது பொருது திருவதிகை வீரட்டானம் என்ற க்ஷேத் திரத்தில் சிவபெருமானிடத்தில் முறையிட்டு வந்தார். அவர் பிரார்த்தனைக்கிரங்கி பரமசிவன் அப்பருக்கு வயிற்றில் நோயுண்டாகும்படிசெய்து அதன் மூலம் அவரைச் சைவத்துக்குத் திருப்பினுர். நாம் இப் பொழுது சிவாலயத்தில் கூடியிருப்பதால், சிவபக்தர் களுடைய பெருமையைக் கூற வேண்டுமென்று நினைத் தேன். முன்னுளில் வேறு மதங்களில் சேர்ந்துவிட்ட பிராமணர்களை மறுபடி வைதிக மதத்தில் சேர்த்துக் கொள்வதில்லை. மற்ற வர்ணங்களில் சேர்த்துக்கொள்வ துண்டு. அதற் கறிகுறியாக நந்தி முத்திரை, சூல முத்திரை என்று இரண்டு முத்திரை போடுவதுண்டு. அப்பருக்குப் பெண்ணுடகம் என்ற க்ஷேத்திரத்தில் நந்தி முத்திரையும் சூல முத்திரையும் போட்டார்கள். திலக வதியாரின் பிரார்த்தனையால் அவர் மறுபடி சிவபக்த

ரானுர். அப்படியே மங்கயர்க்கரசியின் பிரார்த்தனையால் பாண்டிநாடும் அரசனும் மறுபடி சைவநெறியில் திரும்பினார்கள். திருஞானசம்பந்தஸ்வாமிகளின் மகிமையை அவரும் மந்திரி குலச்சிறையாரும் கேள்விப்பட்டு அவர் பாண்டியனைத் திருப்ப வேண்டுமென்று தூதனுப்பினர். பால்மணமாறாத குழந்தைப் பருவத்தினராகவிருந்த சம்பந்தரைக் கண்டவுடன் " இக்குழந்தையால் ஆகுமோ. என்று மங்கயர்க்கரசியார் கவலைப்பட்டார். அப்படி அவர் இளையவராயினும் சமணர்களுக்கும் அவருக்கும் சில பந்தயங்கள் ஏற்பட்டு அவைகளில் சமணரே தோற்றுப்போயினர். பிறகு அவரவர் மதத்தின் கொள்கையை ஏட்டில் எழுதி வைகையில் விடுவதென்றும் எது ஆற்றை எதிர்த்துப் போகுமோ அது சத்தியமென்றும் பேசிக்கொண்டார்கள். அப்பொழுதுதான் சம்பந்தஸ்வாமிகள் "வாழ்க அந்தணர்" என்ற பதிகத்தைப் பாடினார்.

" வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயவையெல்லாம், அரநாமமே
சூழ்க, வையகமும் துயர் தீர்கவே "

எங்கு பார்த்தாலும் ஹரநாமம் சூழ்க, அதனல் வையகத்தின் துயர் ஒழிக என்று அவர் இப்பதிகத்தில் சொல்லியிருப்பதைக் கவனிக்கவேண்டும். நாம் சிவ தரிசனம் செய்யும்போது ஹர ஹர என்று கன்னத்தில் போட்டுக்கொள்ளுகிறோம். கன்னத்தில் அடித்துக் கொள்வதற்கே ஹர ஹர போட்டுக்கொள்ளுதல் என்று

பெயர். வைஷ்ணவர்கள் பெருமாளைச் சேவிக்கும்போது, கன்னத்தில் அடித்துக்கொள்வதில்லை. ஹர ஹர என்று சொல்வதால் துயர் தீருமென்று பெரியார் சொல்லி யிருக்கிறார்கள். துயரை நீக்க நாம் வக்கீல்கள், டாக்டர்கள் முதலிய பலரை யோசிக்கிறோம். துயரைத் தீர்க்க நமது பேரியோர்கள் சொல்லியிருக்கும் உபாயத்தையும் மதிப்போம். பிரபஞ்சத்தின் துயர் ஒழிய ஹரநாமம் சூழவேண்டும். ஈசுவரபக்தி உண்டாகிவிடின், அடியார் பக்தி தானாக வந்துவிடும். அப்பொழுது பரஸ்பர அன் புண்டாகும். திருகோணம்போல் ஈசுவரனிடத்தில் நமக்கன்பு, அவருக்கன்பு; ஆகையால் அவருக்கு நம் மிடத்தில் அன்பு, அவரிடத்தில் நமக்கன்புண்டாகும்.

வைஷ்ணவ சம்பிரதாயத்தில் "கோவிந்தா கோவிந் தா" என்று நாமாவளி போடுவது வழக்கம். பிராமணர் களில்தான் சிலர் தவிர மற்ற வர்ணத்தார்கள் எல்லோ ரும் இரண்டையும் சொல்லுவர். வைஷ்ணவர்களிலும் இப்பொழுது வெகுசிலர் தவிர மற்றவர்கள் "ஹர ஹர" என்று சொல்லுகிறார்கள். சைவமும் வைஷ்ணவமும் ஒரு பொது மதத்தின் கிளைகள். பொது மதம் வைதிக மதம். "வேதநெறி தழைத்தோங்க" என்று ஞான சம்பந்தர் சொல்லியிருக்கிறார். சைவத்திற்கு வைதிகச் சைவம் என்றே பெயர். பாண்டி நாட்டில் நாஸ்திக வெள்ளம் புரண்டுவிட்ட காலத்தில் மங்கயர்க்கரசியார் சிவபக்தியுள்ளவராக இருந்ததால் தான் ஒரு பச்சைக் குழந்தையின் அனுக்கிரஹத்தால் அரன் நாமம் பாண்டி நாடெங்கும் ஒலிக்கும்படி ஏற்பட்டது. அன்று அக்

குழந்தை விரும்பியதை இன்றும் நாம் சொல்லுகிறோம். பெரியார் நினைப்பது நடந்துவிடுகிறது.

இப்பொழுது லோகமுள்ள நிலைமையில் நாஸ்திக புத்தி தீவிரமாகவுள்ள வீடுகளிலும் ஸ்திரீகள் நைந்து உருகுகிறார்கள். அவர்களுக்குப் பக்தி இருக்கிறவரையில் நமது மதத்திற்கு ஹானி ஏற்படமாட்டாது, நமது தர்மம் கெடாது. தம்முடைய சகோதரன் நாஸ்திகனாகிவிட்ட காலத்தில் திலகவதியார் பிரார்த்தித்ததற்கிரங்கியே பரம கருணாநிதி அவரைச் சைவத்திற்குத் திருப்பினார். தம்முடைய புருஷன் நாஸ்திகனாகிவிட்டதைப் பொறாது மங்கயர்க்கரசியார் துன்பப்பட்டதற்கிரங்கியே பரமேசுவரன் அனுக்கிரஹித்தார். ஸ்திரீகள் நமது கோவில்களில் ஸந்நிதானத்தில் பிரார்த்திக்கும் வரையில் பாதகமில்லை. புருஷர்கள் வெள்ளைக்கார தேசங்களின் ஆசாரங்களைப் பார்த்துப் புரண்டு போய் விடுகிறார்கள் ; ஆனால் நமது ஸ்திரீகளின் உறுதி அசைவதில்லை.

இப்படி ஸ்வாமிகள் சொல்லிவருகையில் பாம்பென்று சொல்லிக்கொண்டு ஒரு பக்கத்திலிருந்து ஜனங்கள் எழுந்துவிட்டனர். சிறிது நேரமானவுடன் பாம்பல்லவென்று உட்கார்ந்துவிட்டார்கள். அப்பொழுது ஸ்வாமிகள் பின்வருமாறு சொன்னார்கள் :—

விஷ்ணு ஸகஸ்ரநாமத்தில் மகாவிஷ்ணுவுக்கு ஆயிரம் பெயர்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அப்படியே சிவ சகஸ்ரநாமம், லலிதாஸகஸ்ரநாமம் என்ற அம்பாள் சகஸ்ரநாமமுண்டு. “பேராயிரம் பரவிவானவர் எத்

தும் பெம்மானே" என்று தேவாரத்தில் சொல்லி யிருக்கிறார்கள். அது நிற்க, விஷ்ணு ஸகஸ்ரநாமத்தில், "பயக்ருதே நம:" என்றும் "பயநாசநாய நம:" என்றும் சேர்ந்தாற்போல் பயத்தை உண்டு பண்ணு கிறவர் அவர் என்றும், பயத்தை நாசம் செய்கிறவர் அவரே என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் பயம் பொய். அப்படியே இப்பொழுது ஏற்பட்ட பயமும் பொய். அப்படியே தர்மத்திற்கு ஹானி ஏற்பட் டிருப்பதாக தேசத்தில் ஏற்பட்டிருக்கிற பயமும் பொய் யாகிவிடும். அது பொய்யாகிவிடும்படி ஸ்திரீகள் பகவத் ஸந்நிதானத்தில் பிரார்த்திக்கவேண்டும்.

---

# கோவில்களின் உபயோகம்.

பகவான் அநேக அவதாரங்களை எடுத்திருக்கிறார். அந்த அவதாரங்களில் ராமாவதாரமும் கிருஷ்ணாவதாரமும் முக்கியமென்று அறிந்திருக்கிறோம். இந்த இரண்டு அவதாரங்களையும் பற்றித் தனியாக ராமாயணமும் பாகவதமும் ஏற்பட்டிருப்பதால் இவை முக்கியமென்று அறிகிறோம். வியாசர் 18 புராணங்களைச் செய்திருக்கிறார். அவைகளில் 4 லட்சம் சுலோகங்களுண்டு. தசாவதாரக் கதைகளையும் 18 புராணங்களில் அவர் சொல்லியிருக்கிறார். ஆனால் வால்மீகி மகரிஷி ராமாவதாரத்தைச் சொல்லத் தனியாக இராமாயணம் செய்திருப்பதால் தான், ஸ்ரீராமனுடைய விசேஷ மகிமையை நாம் அறியக்கூடியதாக இருக்கிறது. இமய முதல் சேது வரையில் மனிதரின் பெயர்களிலும் ஊர்களின் பெயர்களிலும் ராம நாமமே அதிகமாகவிருக்கிறது. பள்ளிக்கூடப் பாடபுத்தகங்களில் கூட பல பாஷைகளிலும் ராம சரித்திரம் எழுதப்பட்டிருக்கிறது. அநேகம் கவிகள் ஸ்ரீராமனது குணங்களைப் பாடியிருக்கிறார்கள். ஆயினும் ஒரு சந்தேக மேற்படுகிறது.

நாம் கோவிலுக்குப் போய் நம்முடைய குறைகளை நிவர்த்தி செய்யவேண்டுமென்று பகவானை வேண்டிக்

---

சென்னை முத்யாலு பேட்டையில் அரண்மனைக்காரத் தெருவிலுள்ள ஸ்ரீ கச்சபேசுவரர் ஆலயத்தில் (24-1-33) ஸ்வாமிகள்செய்த உபன்யாசம்.

கொள்ளுகிறோம். சில சமயங்களில் நிவர்த்தி உண்டாகிறது. ஆனுல் எல்லாம் நிவர்த்தியாவதில்லை; ஒன்று ஸ்வாமிக்கு ஸர்வக்ஞத்துவமில்லை; அல்லது கருணையில்லை. ஆனுல் அவர் ஸர்வக்ஞர் என்றும், தயாஸிந்து என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. நமது கர்மாவினுல் துன்பம் விளைந்ததாயின், கர்மாவை துவம்ஸம் செய்ய அவருக்குச் சக்தியில்லையா?

பாதிரிமார்கள் அவர்களுடைய பிரசாரத்திற்காக ஒரு புஸ்தகம் போட்டிருக்கிறுர்கள். அதில் ராமனைப் பற்றி இப்படிக் கேள்வி கேட்டிருக்கிறுர்கள். இராவணன் சீதையைத் தூக்கிக்கொண்டு போகையில் ஒரு மைல் தூரத்திலிருந்த ஸ்ரீராமனுக்கு சீதைபோட்ட கூச்சல் காதில் விழவில்லையா? சீதை போட்ட கூச்சல் காதில் விழாதிருந்திருக்கையில், இப்பொழுது நீங்கள் அவரைக் கூப்பிடுவது அவருடைய காதில் எப்படி விழும்? என்று அவர்கள் கேட்டிருக்கிறுர்கள். இப்படி யெல்லாம் அவர்கள் பிரசாரம் செய்து சிறிது பலனடைந்திருக்கிறுர்கள். அநேக கிராம ஜனங்கள் இப்படிப்பட்ட பிரசாரத்தால் அவர்களுடைய மதத்தைத் தழுவிவிட்டார்கள். தஞ்சாவூர் ஜில்லா தென்பாகத்திலும் ராமநாதபுரம் ஜில்லா வடபாகத்திலும், இரண்டுக்கும் இடையிலுள்ள புதுக்கோட்டை ராஜ்யத்திலும் உள்ள உடையார் ஜாதியாரில் அநேகர் கிறிஸ்தவர்களாகி விட்டனர். சுமார் 300 வருஷங்களுக்குள் பல கிராமத்தார்கள் இப்படி மாறி விட்டனர். யாழ்ப்பாணத்திலும் சைவர்களாக விருந்த உயர்ந்த பிள்ளைமார்களில் அநேகர் கிறிஸ்தவர்களாகி

விட்டனர். சில ஜாதியார்களை நாம் கோவிலுக்குள் விடாததால் அவர்கள் கிறிஸ்தவர்களாகி விடுவதாகச் சொல்லப்படுகிறது. கோவிலுக்குப் போகக்கூடிய ஜாதியினரும் கிறிஸ்தவர்களாகி யிருக்கின்றனர் என்பது மேலே நான் சொன்ன விஷயங்களிலிருந்து தெரிகிறது. கிறிஸ்தவர்களாகிவிட்ட பஞ்சமர்களின் நிலைமை உயர்ந்துவிடவில்லை. கிறுஸ்தவர்களாகி விட்டனர் என்பதற்காக நமது கோவில்களில் அவர்கள் விடப்படவுமில்லை, அவர்களுடைய கோவில்களில் மற்றவர்களுக்குச் சமமாக நடத்தப் படுவதாகவும் தெரியவில்லை. நம்மிடத்தில் ஒரு தப்பிருக்கிறது. நமது மதாசாரங்களைப் பாதுகாக்க வேண்டியவர்கள் தரித்திரம் காரணமாக இங்கிலீஷ் படித்து மதாசாரங்களில் சிரத்தை இழந்துவிட்டதால் பாதிரிகள் பிரசாரத்திற்கு எதிர் பிரசாரம் செய்யப்படவில்லை. பாதிரி மார்களுக்கு ராஜாங்கத்தின் உதவி இருக்கிறது. "எக்ளீஸியாஸ்டிகல் டிபார்ட்மெண்டு" என்று ராஜாங்கத்தில் அதற்காக ஒரு இலாகாவே இருக்கிறது. சர்க்காரால் அந்த இலாகாவுக்குச் செலவு செய்யப்படுகிறது. நமது ராஜாக்கள் இருந்த காலத்தில் அவர்களும் அப்படியே நமது மதத்தைக் காப்பாற்றி வந்தார்கள். கோவில்களுக்கு மான்யம் விட்டிருந்தனர். சாஸ்திரங்களைப் படித்து விருத்தி செய்வதற்காகப் பிராம்மணர்களுக்கு சுரோத்திரியங்கள் விட்டிருந்தனர். கோவில்களுக்கு மான்யம் விடுவதென்றால் சில கிராமங்களிலிருந்து ராஜாங்கத்திற்குச் சேரவேண்டிய பாகத்தைக் கோவிலுக்கு அளந்து விடும்படி உத்தரவு செய்வதேயாகும். ஆகையால் நிலத்தின் சொந்தக்

காரருக்கும் சாகுபடி செய்கிறவர்களுக்குமுள்ள பாத்யம் மான்யத்தால் பாதிக்கப்படமாட்டாது. ராஜாங்கத்திற்குச் சேர வேண்டியதையே அவர்கள் கோவிலுக்குக் கொடுத்து விட்டனர். ராஜாங்கத்திற்குச் சேர வேண்டியது அந்நாளில் நெல்லாகச் செலுத்தப்பட்டு வந்தது. ஆகையால் கோவில்களுக்கும் மான்யம் நெல்லாகச் செலுத்தப்பட்டு வந்தது. இந்த ராஜாங்கத்தார் வந்ததும் நெல்லுக்குப் பதிலாக அக்கால விலைப்படி ரொக்க ரூபாயாகக் கொடுத்து விடுவதாகச் சொல்லி விட்டார்கள். அந்தக் காலத்தில் கல நெல்லின் விலை கால் ரூபாயாக இருந்தது. இந்த விலைப்படியே கோவில்களுக்கு மோகினித்தொகை போட்டனர். அது தர்ம நியாயமே. அப்போழுது 10 ரூபாய்க்கு 40 கலம் நெல் வாங்கலாம். இப்பொழுது அவ்வளவு கிடைக்காது. பிறகு நெல் விலை உயர்ந்து வந்திருப்பதற்குத் தகுந்தாற்போல சர்க்கார் கிஸ்தியைச் சில சமயங்களில் உயர்த்தியிருக்கிறார்கள். ஆனால் கோவில்களுக் கேற்பட்ட மோகினித் தொகை அந்தக்காலத்தில் நிர்ணயிக்கப்பட்டபடியே இருக்கிறது. கோவில்களின் சம்ரட்சணைத்துக்கு இப்பொழுது அது போதவில்லை. கோவில்களில் அனுசாரமான காரியங்கள் செய்யப்படுகின்றன. அதைத் தடுக்க மெய்காவல்காரர்களை அதிகமாக நியமிக்க ஐவேஜில்லை. நமது மந்திரிகள் முதலிய ராஜாங்கத்தில் செல்வாக்குள்ளவர்கள் விஷயத்தை ராஜாங்கத்துக்கு எடுத்துச் சொல்லி அவர்கள் எடுத்துக் கொண்டு விட்ட மான்யதத்திற்குக் கிடைக்கவேண்டிய நெல்லுக்குக் கால விலைப்படி மோகினிகொடுக்க வேண்டு மென்று சொன்னால், ராஜாங்

கத்தார் கேட்பார்கள் என்று நம்புகிறேன். நவாபுகள் ராஜ்யமாண்டகாலத்திலும் கோவில்களுக்கு மான்யம் விட்டனர். அவர்கள் ராஜ்யம் நிலைத்தபிறகு எல்லாப் பிரஜைகளையும் அநேகமாகச் சரிசமத்துவமாகவே நடத்தி வந்தார்கள். நமது மடத்துக்குக்கூட அவர்களுடைய ராஜ்யத்தில் மான்யம் விட்டனர். நமது ராஜாங்கத்தாருக்கு நியாயத்தை எடுத்துச்சொன்னால், அதை அவர்கள் ஆதரிப்பார்கள். எடுத்துச் சொல்வார்தானில்லை. ராஜாங்கத்தைச் சேர்ந்த சபைகளுக்குப் போகிறவர்கள் ஆலயங்களில் சிரத்தையுள்ளவர்களாக இருக்கவேண்டும் நமது ஆலயங்களில் அனுசாரங்கள் நடக்கின்றன. குருக்கள்களில் சிலர் ஆசாரமில்லாதவர்களாக இருக்கிறார்கள்; அதையெல்லாம் நிவர்த்திசெய்ய இப்பொழுதுள்ள பணம் போதவில்லை. ஆலயங்களில் சூதாடாமல், பிடி குடிக்காமல் பார்த்துக்கொள்ள வேண்டும். குருக்கள்மார்கள் ஸ்நானம் செய்து விட்டே ஸ்வாமியைத் தொடவேண்டும். கோவில் அதிகாரிகள் அதற்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்து கொடுக்க வேண்டும். மலையாளத்தில் பூஜை செய்கிறவர்கள் பிராம்மணன் மேல் பட்டுவிட்டாலும் மறுபடி ஸ்நானம் செய்துவிட்டே ஸ்வாமியைத் தொடவேண்டும். பூஜை செய்கிறவர்கள் மந்திரங்களைத் தெரிந்தவர்களாக இருக்க வேண்டியது அவசியம். அவர்கள் அத்யயனம் செய்திருக்கவேண்டும். இப்படியெல்லாம் நடைபெறும்படி கோவில் அதிகாரிகள் உபகாரம் செய்யவேண்டும், அவர்களுக்கு ஜனங்களின் ஆதரவிருக்கவேண்டும்.

ராமாவதாரத்தைப்பற்றிப் பேசுங்கால், இவ்விஷயங்களை யெல்லாம் சொல்லும்படி நேரிட்டது.

கிறிஸ்தவப் பாதிரிகள் நம்மைக் கேட்கும் கேள்விகளை நாமும் அவர்களைக் கேட்கலாம். அவர்களும் கோவில்களில் ஸ்வாமியைக் கூப்பிடுகிறார்கள். தங்கள் குறைகளை நிவர்த்தி செய்ய வேண்டுமென்று கேட்கிறார்கள் ; மெழுகுவர்த்தி ஏற்றி வைக்கிறார்கள். ஆயினும் அவர்களுடைய கேள்விகளுக்கு நமது சாஸ்திரங்கள் தான் பதில் சொல்ல முடியும். அவர்களைக் கேட்டால் ஸேடன் என்று ஒரு துஷ்டன் பகவானுக்குப் போட்டியாக ஒரு ராஜ்யம் நடத்தி வருவதாகவே சொல்லுவார்கள். நமது சாஸ்திரங்கள் என்ன சொல்லுகின்றன ? ஈசுவரன் பரிபூரணமான ஞானஸ்வரூபி. ஆகையால் ஒன்று நல்லதென்றும் ஒன்று கெட்டதென்றும் அவருக்கில்லை. நாம் கிஞ்சித் ஞானமுள்ளவர்களாகையால் நல்லது கெட்டது என்றும், சுகம் துக்கம் என்றும் நினைக்கிறோம் என்று சாஸ்திரம் சொல்லுகிறது. நல்லது கெட்டது இல்லையானால் பல ஆசாரங்களை என் சாஸ்திரம் ஏற்படுத்தி யிருக்கிறது என்று கேட்கலாம். நல்லதென்றும் கெட்டதென்றும் நாம் நினைக்கிறோம். அந்த எண்ணம் ஒழியும்படி செய்யப் பல காரியங்களைச் செய்யும்படி பகவான் கட்டளையிட்டிருக்கிறார். அவரவர் விரும்புவதை அவர் கொடுப்பாராயின், ஜீவர்களின் ஆசையைப் பெருக்கிவிடுவார். கொடுக்கக் கொடுக்கமென்மேலும் ஆசை பெருகும். ஆகையால்தான் அவர் நமது விண்ணப்பங்களின்படி செய்வதில்லை. தம்மிடத்தில்

நம்பிக்கை இருக்கும்படி செய்வதற்காக மாத்திரம் ஒரு சமயத்தில் ஏதேனும் அனுக்கிரகம்செய்வார். ஸ்வாமி வரன் கொடுப்பாராயின், மனிதர்களின் குறைகள் தான் அதிகப்படும். பதினாலுலோகங்களையும் பெற்றாலும் திருப்தி உண்டாகாது. ஆகையால் குறைகளை அதிகப் படுத்தாதிருக்கவே அவர் வரன்கொடுப்பதில்லை. நல்லது பொல்லாதது என்ற நினைப்பு ஒழியுமானால் குறை ஒழிந் துவிடும். பேதஞானமற்ற ஒன்றைப் பிடித்துக்கொண் டால்தான், நமக்கும் அந்த ஞானமுண்டாகும். ஆகை யால் அப்படிப் பட்ட அத்வைதமான ஸ்வரூபத்தை நாம் தியானம் செய்யவே கோவில் ஏற்பட்டிருக்கிறது. ஆசாரங்களை அனுஷ்டித்து அனாசாரங்களை விலக்கிவந் தால், பேதஞானமற்ற நிலையுண்டாகும். ஆசாரம் தொலைந்துவிட்டால் அப்படிப்பட்ட நிலை ஒன்றிருப்பதே மறந்துபோகும். பேதஞானமற்ற நிலையை அடைய பேதஞானமற்றவரிடத்தில் அன்பு செலுத்த வேண்டும். பிரதிப் பிரயோஜனத்தை எதிர்பாராமல் பக்தி செய்ய வேண்டும். ஈசுவரபக்தி செய்வதற்காக அவருக்கு அபி ஷேகாதிகள் செய்வானேன் என்று கேட்கிறார்கள். கேள்வி சரிதான். ஆனால் இந்தக் கேள்வியில் அன் பில்லை. நம்முடைய வீட்டில் குழந்தைக்கோ தாயாருக் கோ அசௌக்கியமாக இருக்கிறது, பிழைப்பதரிது என்று தெரிந்தும் வைத்தியம் செய்கிறோம். என்? அன்பு அதற்குக்காரணம். ஈசுவர பக்தி காரணமாகக் கோவில் கட்டுகிறோம். அதனால் ஈசுவரனுக்கு ஒரு லாபமுமில்லை. நம்முடைய ஆத்மா பரிசுத்தியை அடைய

வேண்டும். நமது தர்மங்கள் எவ்வளவோ காலமாக நடந்து வந்திருக்கின்றன. வேறு எந்த மதமும் இவ்வளவு கால மிருந்ததில்லை.

சிறிதுகாலம் அவை மறைந்தாலும் பாதகமில்லை. எத்தனையோ அண்டங்கள் இருக்கின்றன. எங்கேயாவது இருந்து கொண்டுதானிருக்கும். நமதுமதம் எவ்வளவு வலுவுள்ளதென்பது நமது கோவில்களிலிருந்து தெரிகிறது. பாழாகிவிட்ட கோவில்களும் இடிந்து விழுந்து விடுவதில்லை. அஸ்திவாரம் அவ்வளவு பலம். கட்டினதற்கான செலவு இடிக்கவுமாகும். அப்படி இடித்து, கற்களை அப்புறப்படுத்திவிட்டாலும் சில காலங் கழித்து ஏற்கனவே கோயில் இருந்த இடம் என்று யாரேனும் ஒரு ஸ்வாமியைப் பிரதிஷ்டை செய்து விடுவார். ஆகையால் நமது மதம் அழியாது. உடன் கட்டை ஏறுவதைச் சட்டத்தினால் தடுத்து விட்டார்கள். அந்தக் காரியம் தப்பென்று இன்னும் நாம் நினைக்கவில்லை. வடக்கில் வருஷத்தில் இரண்டு பேர்களாவது இன்னும் உடன்கட்டை ஏறிவருகிறார்கள். அவர்களை மகாபதிவிரதை என்று ஜனங்கள் கொண்டாடுகிறார்கள். முற்காலத்தில் நிர்ப்பந்தம் செய்து எல்லா ஸ்திரீகளும் உடன் கட்டை ஏறும்படிசெய்தார்கள் என்பது தப்பு. அப்படியானால் விதவைகளுக்கு ஆசார விதிகள் ஏற்பட்டே இருக்க முடியாது.

சிவாஜி மகாராஜாவும் வித்யாரண்ய ஸ்வாமிகளும் நமது தர்மங்களை அஸ்திவாரமாகக் கொண்டதாகவே தெரிகிறது. ஆத்ம பரிசுத்திக்காகவே கர்மங்களைச்

செய்ய ராஜ்யங்களை ஸ்தாபித்தார்கள். சுயராஜ்யத்துக்காக தர்மங்களைத் துறந்துவிடவேண்டியதில்லை. எவரிடத்திலும் கோபப்படாமல் நமது கடமையை நாம் செய்யவேண்டும்.

பாதிரிமார்களின் கேள்விக்குப் பதில் :—

தர்மசாஸ்திரப்படி மனிதன் எப்படி நடக்கவேண்டுமென்பதைத் தானே நடத்திக்காட்ட பகவான் ராமாவதாரம்செய்தார். நாடகசாலைகளில் வேஷத்திற்குத் தகுந்தபடி நடிக்கவேண்டும். ஒரு நாடகசாலையில் வஸிஷ்டர் ஆசிரமம் காணப்படுகிறது; லவ குசர்கள் நின்றுகொண்டிருக்கிறார்கள், ராமன் வருகிறார். அவர் வஸிஷ்டரைப் பார்த்து இக்குழந்தைகள் யார் என்றால் ராஜபார்ட் ராமஸ்வாமி அய்யங்கார் குழந்தைகள் என்று சொல்லக்கூடாது. அது உண்மையாயினும் ரஸாபாஸம். பாதிரிமார்களின் கேள்வியும் அப்படியே. பகவான் மனிதனாக நடிக்கையில் அவருடைய தெய்வீகசக்தி எங்குபோய் விட்டதென்று கேட்பது ரஸாபாஸம்.

---

# ஸ்வாமி என்பது என்ன ?

---

வைகுண்டத்தில் ஸ்வாமி இருக்கிறார், ஹிருதயத்தில் இருக்கிறார், கோவிலிலிருக்கிறார் என்றெல்லாம் நமது பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். கோவிலில் இருக்கிறார் என்பதால் அங்கு நமஸ்காரம் செய்கிறோம். ஹிருதயத்தில் இருக்கிறார் என்பதால் சிவ பூஜை செய்கிறவர்கள் முதலில் தங்கள் ஹிருதயத்தில் ஈசுவரனுக்கு உபசாரம் செய்து விட்டு அங்கிருந்து அவரை மூர்த்தியில் ஆவாஹனம் செய்து, பிறகு மூர்த்தி பூஜை செய்வது வழக்கம். வைகுண்டத்தில் இருக்கிறார் என்பதுபோல் கைலாசத்தில் இருக்கிறார் என்றும் பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். வைகுண்டம் என்பது பரமபதம். "தத் விஷ்ணோः பரமம் பதம்" என்று வேதம் சொல்லியிருக்கிறது. யாராவது காலமாகி விட்டால் "பரமபதத்திற்கு எளி விட்டார்" என்று வைஷ்ணவர்க்ள் செல்வார்கள். அதற்கு வைகுண்டத்திற்கு எழுந்தருளி விட்டார் என்று அர்த்தம். வைகுண்டத்தில் இருக்கிறார் என்று சொல்லும் ஸ்வாமியைப் புருஷோத்தமன் என்று சொல்வதுண்டு. புருஷோத்தமன் என்ற வார்த்தைக்குப் பெரும் ஆள் என்று அர்த்தம். ஆகையால் பெருமாள் என்கிறார்கள். புருஷோத்தமன்

---

சென்னை அரண்மனைக்காரத் தெருவில் உள்ள ஸ்ரீ கச்சபேசுவரர் ஆலயத்தில் (25-1-33.) செய்த உபன்யாசம்.

என்ற சொல்லில் உத் என்பதற்குப் பெரியவர் என்பது அருத்தம். உத்தமம் என்றால் மிகப் பெரியவர் என்பது ; புருஷ உத்தமன் அல்லது உத்தம புருஷன் பெருமாள். வைஷ்ணவர்கள் தான் ஸ்வாமியைப் பெருமாள் என்கிறார்கள். மற்றவர்கள் ஸ்வாமி என்றே சொல்லுகிறார்கள் ; சுவாமி என்ற வார்த்தையில் ஸ்வம் என்பதற்கு சொத்து என்பது அர்த்தம், உடைமை என்று இலக்கணமாகச் சொல்லலாம். ஸ்வம் உடையவர் ஸ்வாமி. அதாவது சொத்தை உடையவர். சொத்து எது? நாம்தான். என் ஸ்வாமி என்றால் என்னைச் சொத்தாக உடையவர் என்று அர்த்தம். ஆகையால் அவரை "உடையார்" என்றும் சொல்வதுண்டு. திருவேங்கடமுடையார் என்றும், திருச்சிற்றம்பலமுடையார் என்றும் சொல்வதுண்டு. நானூறு ஐந்நூறு வருஷங்களுக்குமுன் கோவில் சுவர்களில் வெட்டப்பட்ட சிலாசாஸனங்களில் 'உடையார்' என்றே ஸ்வாமிக்குப் பிரதிபதம் உபயோகிக்கப்பட்டு வந்தது. நாகேச்சுரமுடையார் என்றும், கபாலீச்சுரமுடையார் என்றும் காண்கிறோம். நமது ஆதி ஆசார்யாளுக்குச் "சிக்குடையார்" என்று பெயர் வழங்கியிருக்கிறது. கன்னடத்தில் "சிக்க" என்பதற்குச் சிறிய என்பது அருத்தம். காஞ்சிபுரம் ஏகாம்ரேசுவரர் தொட்ட உடையார் என்று சாஸனங்களில் சொல்லப்பட்டிருக்கிறார். இந்தச் சென்னபட்டணத்தைச் சுற்றியுள்ள திருவள்ளூர் முதலிய மூன்று தாலூகாக்களில் சிக்குடையார் என்ற இன்ன ஆசார்யாளுக்கு ராஜாவுக்குக்

குடிகள் செலுத்தவேண்டிய தீர்வையில் கலத்துக்கு ஆழாக்கு வீதம் வர்த்தனை கொடுத்துவரும்படி சோழ ராஜாக்களும் பல்லவ ராஜாக்களும் உத்தரவு பிறப்பித்திருந்தார்கள். இப்பொழுதும் அது நடந்து வருகிறது. எவராவது கொடாவிடில் இப்பொழுதுள்ள ராஜாங்கத்தாரிடம் தெரியப்படுத்தினால் அதைக் கொடுக்கும்படி அவர்களும் உத்தரவு செய்கிறார்கள். நிலத்தின்மேல் அது ஏற்பட்ட வர்த்தனையாகையால் அந்த நிலங்கள் எந்த மதஸ்தரிடமிருப்பினும் அவர்கள் கொடுக்கவேண்டும். சென்னபட்டணத்திற் கருகாமையிலேயே மடத்திற்கு இப்படி பாத்யம் ஏற்பட்டிருப்பதால், மடம் இந்தப் பக்கத்தைச் சேர்ந்ததென்பது தெளிவாகிறது. மடத்தில் ஆசார்யாளாக விருந்த இரண்டு ஸ்வாமிகளுடைய பிருந்தாவனங்கள் திருவொற்றியூரில் இருக்கின்றன. இந்தப் பிரதேசத்திலேயே மடம் இருந்ததென்பது இதனாலும் தெரிகிறது. மேலும் திருவொற்றியூரில் ஆதி ஆசார்யாள் சிலை இருக்கிறது. சென்னையிலும் திருவெட்டீசுவரன் கோவிலிலும் ஏகாம்பரேசுவரர் கோவிலிலும் சென்னபுரீசர் கோவிலிலும் அவருடைய சிலை இருக்கிறது. இப்படி மற்ற ஊர்களில் இரண்டு மூன்று கோவில்களில் இல்லை. இத்தியாதி விஷயங்களிலிருந்து சென்னைபட்டணத்தைச் சூழ்ந்த பிரதேசமே ஆதி ஆசார்யாளுக்கு நிரம்ப சொந்தமென்று தெரிகிறது. ஸ்வாமி என்ற சொல்லுக்கு உடையார் என்பது அர்த்தமென்பதிலிருந்து இந்தப் பிரஸ்தாபமெல்லாம் ஏற்பட்டது. ஸ்ரீ ராமானுஜருக்கு உடையவர் என்று பெயர் ஏற்பட்டிருப்பதும் ஸ்வாமி என்ற

சொல்லின் மொழிபெயர்ப்பே. ஸ்ரீ ராமானுஜஸ்வாமி என்று சொல்வதற்குப் பதிலாக உடையவர் என்று சொல்லுகிறார்கள். இதெல்லாம் இருக்கட்டும். ஸ்வாமி எங்கிருக்கிறார்? வைகுண்டத்திலோ, கைலாசத்திலோ, இருதயத்திலோ இருக்கிறார் என்பது ஒப்புக்கொள்ளக் கூடியது. கோவிலில் இருக்கிறார் என்பது என்ன? கோவிலில் அவர் இருப்பின், மற்ற இடங்களில் இல்லையா? ஒவ்வொரு கோவிலில் இருப்பவர் ஒன்றா, வெவ்வேறா? அவர் எங்குமிருப்பின் கோவிலில் கும்பிடுவானேன்? ரோட்டில் கும்பிட்டாலென்ன? கோவிலில் "அந்தப் பக்கம் காலை நீட்டாதே, அங்கே ஸ்வாமி இருக்கிறார்" என்று சொல்லுகிறார்கள், அப்படியானால் அவர் எங்குமில்லையா?

ஒரு உதாரணத்தை எடுத்துக்கொள்வோம். சூரியன் எங்குமிருக்கிறார். அவருடைய கிரணத்தில் பிரகாசமும் உஷ்ணமுமிருக்கிறது. சூரியனுடைய தேஜஸே யல்லாமல், எல்லாத் தேஜஸுக்கும் இந்த இரண்டு குணங்களுமிருக்கின்றன. ஆனால் ஒரு தேஜஸில் ஒன்று குறைவாகவும், மற்றது ஜாஸ்தியாகவுமிருக்கலாம். இரும்புச் சட்டியை அடுப்பில் வைக்கிறோம். சிறிது நேரமாக விட்டு அதில் உஷ்ணம் அதிகமாக விருக்குமாயினும், பிரகாசம் குறைவாகவே இருக்கும். மின்மினிப்புப் பூச்சியின் பின்புறத்தில் பிரகாசமிருக்கிறது, ஆனால் உஷ்ணமில்லை. இரண்டுமுள்ள தேஜஸ் சூரிய கிரணம். ஸ்படிகத்தால் செய்யப்பட்ட "லென்ஸ்" என்ற கருவியின் கீழ் பஞ்சைப் பிடித்தால் பல சூரிய கிரணங்கள் ஒன்றுகூடி, பஞ்சில் தீ பற்றிக்கொள்ளுகிறது. கிரணங்

கள் நிலைக் கண்ணுடிமேல் பட்டால் பிரகாசம் அதிகப் படுகிறது. அதுபோல், பகவான் இல்லாத இடமில்லை யாயினும், அவருடைய அனுக்கிரஹ சக்தியை ஒரு செய்கை மூலம் ஒருங்கு சேர்த்து வைத்திருக்கிற இடம் கோவில். அந்தச் செய்கையால் சக்தி ஒருமிக்க ஏன் கூடுகிறது என்பது நமக்குத் தெரியாது. ஆனல் அதில் நாம் ஏதேனும் மாறுதலைச் செய்வோமாயின், கோவில் ரோடுக்குச் சமமாகிவிடும். சாஸ்திரங்களில் எழுதியிருப் பதற்கு மாருக எவராவது நடத்தினுல் அதை நாம் திருத்தவேண்டும். நமது கோவில்கள் பிரார்த்தனை மண்டபமல்ல. ஈசுவர அனுக்கிரகத்திற்காக சாஸ்திரப் படி ஏற்பட்டுள்ள இடங்கள். மகாக்ஷேத்திரங்களில் அனுக்ரஹ சக்தி அதிகமாகவிருக்கிறது. அவை மகரிஷி கள் பூஜித்த ஸ்தலங்கள்.

சரி, ஸ்வாமி என்பது என்ன? நாம் தான். இரண்ணிய கசிபு சொன்னதற்கும் 'நாம் தான் ஸ்வாமி' என்று நான் சொல்வதற்கும் வித்தியாசமில்லை என்று தோன்றும்—ஸ்வாமி வேறு நாம் வேறு அல்லவென்றே நான் சொல்லுகிறேன். அதுதான் அத்வைதம். நான் சொல்லுவதையே திருப்புகழ் பாடின அருணகிரிநாதரும் சொல்லியிருக்கிருர். "நீ வேறெனுதிருக்க, நான் வேறெனுதிருக்க" என்று ஒரு திருப்புகழில் அவர் சொல்லியிருக்கிருர். ஆயினும் இது பரம அபசாரமாகத் தோன்றும். நம்மைப்போல் கிஞ்சித்ஞனுக (சிற்றறி வுடையவனுக) பகவானையும் சொல்லிவிடுவதா? என்று கேட்கலாம். ஆனல், நமதாசாரியாள் அப்படியே சொல்லியிருக்கிருர். அவர் ஷண்மத ஸ்தாபனம் செய்

தவர். மற்ற ஆசார்யாள் எல்லோரும் அவருடைய காலத்திற்குப் பிறகு வந்தவர்களாகையால், அவர்கள் தோன்றின காலம்வரையில் எல்லோரும் அவருடைய சிஷ்யர்களே. அவர் 'நாம் தான்' ஸ்வாமி என்கிறார். புரியவில்லை! ஸ்வாமி என்பது என்னவென்று எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய லட்சணப்படி "நாம் தான் ஸ்வாமி என்பது நிற்குமா, அத்வைதம் தப்பு" என்று சொல்லலாம். ஒரு உதாரணத்தைக்கொண்டு விளக்குகிறேன். ஒரு உத்தரணியில் ஜலமிருக்கிறது, ஒரு பஞ்சபாத்திரத்திலும் ஜலமிருக்கிறது. பஞ்சபாத்திர ஜலம் உத்தரணி ஜலத்தைக் காட்டிலும் பெரிது. செம்பு ஜலம் பஞ்சபாத்திரத்தைக் காட்டிலும் பெரிது. அப்படியே அண்டாஜலம் செம்பு ஜலத்தைக் காட்டிலும் பெரிது, அதைக் காட்டிலும் பெரிது கிணற்று ஜலம், அதை காட்டிலும் பெரிது ஆற்று ஜலம். அதைக் காட்டிலும் பெரியது சமுத்திர ஜலம். அதைக் காட்டிலும் பெரியதில்லை. நாம் அறிந்திருக்கிற பொருள்களில் சமுத்திரத்தைக் காட்டிலும் வேறெதுவும் பெரிதல்ல. நாம் உத்தரணி ஜலம், பகவான் சமுத்திரம். அப்படியே, நாம் சிறிது கனத்தைத் தூக்கமுடியும், மூட்டை சுமக்கும் ஒருவன் நாம் தூக்கக்கூடியதைக் காட்டிலும் அதிகமாகத் தூக்குவான். மாடு அவனைக் காட்டிலும் அதிகம் சுமக்கும், ஒட்டகம் மாட்டைக் காட்டிலும் அதிகம் சுமக்கும்.

ஒரு பிராணியைக் காட்டிலும் மற்றொன்று அதிக சக்தியுள்ளதாக இருப்பதால், இந்த உலகையெல்லாம் சுமக்கக்கூடிய அறிவுள்ள பிராணி ஒன்றிருக்கவேண்டும்

அப்படியே ஒரு புழுவைக் காட்டிலும் ஒரு எரும்புக்கு அதிகமாகத் தெரியும். எரும்பைக் காட்டிலும் நமக்கு அதிகம் தெரியும். நம்மைக் காட்டிலும் ஒரு சாஸ்திரக்ஞனுக்கு அதிகம் தெரியும். அவனைக் காட்டிலும் ஒரு யோகிக்கு அதிகம் தெரியும். ஆகையால் எல்லாமறிந்த ஒருவன் இருக்கவேண்டும். நாம் ஒரு வீட்டைக் கட்டுவோம். அவன் இந்தப் பிரபஞ்சத்தைக் கட்டுவான். நமக்கு ஒரு எல்லையுண்டு, அவன் எல்லை யற்றவன். ஆகையால் அவன் ஞானசமுத்திரம், தயாசமுத்திரம், சக்தி சமுத்திரம், ஸர்வக்ஞன். நாம் அவருடைய சொத்து, அவர் ஸ்வாமி, நம்மை உடையவர்.

இப்படி நிறைந்துள்ள ஸ்வாமியை பகவான் கிருஷ்ணன் விஸ்தாரமாகச் சொல்லியிருக்கிறார். கிருஷ்ணன் என்ற பெயர் அவருடைய சரித்திரம் எவ்வளவு வியாபகமடைந்திருக்கிறதென்பதை ஞாபக மூட்டுகிறது. கிருஷ்ணன் என்ற பெயரை மகாராஷ்டிர பாஷையில் கிஷ்டோ என்றும், கிஷ்டு என்றும் சொல்லுகிறார்கள். கிருஷ்ணன் என்ற பெயரே கிறிஸ்து. ஸ்ரீகிருஷ்ண பகவான் பாதத்தில் அம்புபட்டு தேகத்தை விட்டார். கிறிஸ்துவும் சிலுவையில் ஆணி தைத்து தேகத்தை விட்டார். கிருஷ்ண சரித்திரத்தை நமது புராணத்திலிருந்தே அவர்கள் எழுதிக்கொண்டிருக்கிறார்கள். (ஸ்ரீமான்) எம். எஸ். ராமஸ்வாமி அய்யர் இவ்விஷயமாகச் சில சிறுபிரசுரங்களை வெளியிட்டார். கிறிஸ்து தமிழர் என்றும், விசுவகர்மா வென்றும், தென்கலை நாமம் தரித்தவர் என்றும் எழுதியிருக்கிறார். அது சரி யல்லவென்று நினைக்கிறேன். கிறிஸ்து சுமார் இரண்டாயிரம் வருஷங்களு

க்கு முற்பட்டவர் என்று கிறிஸ்தவர்கள் சொல்லுகிறார் கள். வடகலை, தென்கலை நாமங்கள் ராமாநுஜர் காலத் திற்குப் பிறகு அதாவது சுமார் 600 வருஷங்களுக்குள் ஏற்பட்டவை. இன்றுள்ள ஒரு விஷயத்தை இரண் டாயிரம் வருஷங்களுக்கு முன்னிருந்தாகச் சொல்வது சரியல்ல. நமது உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிற ஒரு விஷயத்தை அவர்கள் படித்துவிட்டு அர்த்தத்தைச் சரியாகத் தெரிந்துகொள்ளளாமல் கிரஹித்துக்கொண் டார்கள் என்று நினைக்கிறேன். ஜா என்ற சப்தம் யா என்ற சப்தமாகமாறி விடும். ஜாகோப் என்ற ஹீப்ரு பாஷைச் சொல் யாகோபாகி விடுகிறது ; ஜோ ஸப் என்பது யூசப் ஆகிவிடுகிறது. ஜம்னு, யமுனை, ஜாத்ரா, யாத்ரை, ஜாதவ், யாதவ், ஜா யா வாகிவிடுவதை இந்த உதாரணங்கள் விளக்குகின்றன. ஒரு உப நிஷத்தில் முதலில் ஆத்மா மாத்திரம் இருந்தார், மாயா சம்பந்தத்தால் ஜீவன் உண்டாயிற்று. அது பிப்பல த்தை (கர்ம பலத்தை) சாப்பிட்டது என்று சொல்லப் பட்டிருக்ககிறது.

ஆத்மாவை ஆதம் என்றும் ஜீவனை ஈவ் என்றும் பலத்தை அப்பிள் பழமென்றும் அவர்கள் "பழைய ஏற்பாட்டில்" எழுதிக்கொண்டு விட்டார்கள். கிருஷ் ணன் கோபாலன் என்று அதாவது பசுவை ரட்சிப்பவர் என்று சொல்லப்பட்டிருக்கிறது. கிறிஸ்துவை 'இடையர்' என்று சொல்லியிருக்கிறார்கள். கிறிஸ்து சரித்திரம் கிரு ஷ்ணன் சரித்திரம் போலவே இருக்கிறது. நமது புராணத்தைப்பற்றி அவர்கள் கேள்விப்பட்டு அதை எழுதிக்கொண்டார்கள். ஒருவரிடமிருந்து ஒருகதை

மற்றவரிடம் போகையில் அதில் மாறுதலேற்படும். எத்தனை கைதாண்டி கிருஷ்ண சரித்திரமும் கிறிஸ்து சரித்திர மாயிற்றே. அலெக்ஸாண்டிரா பட்டணத்தில் பல சபைகள்கூடி இப்பொழுதுள்ள பைபிள் உருவ மடைந்தது. வேறு சில உதாரணங்கள் சொல்லுகிறேன், மனிதன் என்பதற்கு அவர்கள் மான் "Man" என்று சொல்லுகிறார்கள். இந்த "மான்" என்ற சொல் எப்படி உண்டாயிற்று. மனுஜன் என்ற ஸம்ஸ்கிருதச் சொல் தான் அது. ஜன் என்றால் உண்டானது என்று அர்த்தம். மனுஜன் என்றால் மனுவிடமிருந்து உண்டானவன். ஆகையால் "மான்" என்ற வெள்ளைக் காரர் சொல் மனுவைச் சேர்ந்தவன் என்ற அர்த்த முடையது. ஆகையால் "மான்" என்றசொல் ஏற்பட்டதற்குமுன், நமது புராணமிருந்திருக்கவேண்டும். ஆகையால் புராணங்கள் கிறிஸ்து பிறந்த பிறகு இந்த நூற்றாண்டில் உண்டாயின என்றும் கிறிஸ்துவுக்குமுன் இன்ன நூற்றாண்டில் உண்டாயின என்றும் சொல்வது சரியல்ல; மற்ற பாஷைகளில் பொருள் விளங்காத வார்த்தைகளுக்கு அர்த்தம் ஸம்ஸ்கிருதத்திலிருந்து தெரிந்துக்கொள்ள முடியும். பார்ஸிகளின் கிரந்தம் "ஸெண்டவஸ்தா" என்று சொல்லப்படுகிறது. ஸெண்ட வஸ்தா என்பதற்கு என்ன அர்த்தம். "சந்தோபஸ்தா" என்பது "ஸெண்டவஸ்தா" வாகியிருக்கிறது. ரிக்வேத மந்திரங்களே ஸெண்டவஸ்தாவில் ஆபாஸமாக இருக் கின்றன.

நவதாணியங்கள் கலந்து கொண்டால் எப்படி யிருக்குமோ அப்படி நமது புராணக் கதைகள் வெள்

ஊக்கார தேசங்களில் கலந்து விட்டன. கிறிஸ்து சரித்திரத்திற்கு நமது புராணமே மூலம் என்பது எனது அபிப்ராயம். ஆனால் நீங்கள் அதை ஒப்புக்கொள்ள வேண்டுமென்று நான் சொல்லவில்லை.

இனி பகவான் கிருஷ்ணனுடைய உபதேசத்தைச் சொல்லுகிறேன். எல்லாவற்றிலும் உயர்ந்தது ஸ்வாமி என்று அவர் சொல்லியிருக்கிறார் :—அர்ஜுனா, உயிர்களனைத்தின் உள்ளே நிற்கும் ஆத்மா நான், புஷ்பத்தில் நான் வாசனை, மாதங்களில் நான் மார்கழி, ருதுக்களில் நான் வசந்தம், எதெது பெருமை யுடையதோ, உண்மை யுடையதோ, அழகுடையதோ, வலிமையுடையதோ அதெல்லாம் நான், என்று பகவான் சொல்லியிருப்பது போல், எது உத்கிருஷ்டமோ அது ஸ்வாமி ; தயையில் உத்கிருஷ்டம் ஸ்வாமி, ஞானத்தில் உத்கிருஷ்டம் ஸ்வாமி, சக்தியில் உத்கிருஷ்டம் ஸ்வாமி. அவர் நிறைந்தவர், நாம் குறைந்தவர். நாம் பெரிய பள்ளம் போலிருக்கிறோம். அதை தூர்த்து நம்மையும் நிறைவாகச் செய்ய அவர் பிரயாசைப்படுகிறார். ஆனால் நம்முடைய குறைவாகிய பள்ளம் நிறைவதில்லை. ஆகாரம் வேண்டும், பணம் வேண்டும், பட்டங்கள் வேண்டும், உத்தியோகம் வேண்டும் என்று நமக்குப் பல தேவைகள் இருந்து கொண்டே இருக்கின்றன. இத்தனை தேவைகளிலும் "அவன் பணம் என் பையில் வர வேண்டும்" என்ற ஆசையே நிற்கிறது. ஆகையால் இந்தப்பள்ளம் தூர்வதே இல்லை. ஆகையால் நாம் குறைவாகவே இருக்கிறோம். ஸ்வாமிக்குத்தேவை இல்லை. ஆகையால் அவர் நிறைவாகவே இருக்கிறார். அந்தந்தக் குறையை

நிவர்த்தி செய்ய ஒவ்வொன்றுக்கு ஒரு நிறைவு இருக்கிறது. ஒரு கன்னிகையை விவாகம் செய்துகொண்டு அழைத்துக் கொண்டு வருகிறான். அவளுக்கு நிறைவு எது? வணக்கம், நாணம் முதலியன. எனக்கு நிறைவு எது? நான் இங்கே ஒரு ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். உங்களுக்கெல்லாம் உபதேசம் செய்துகொண்டிருக்கிறேன். இது எனக்கு நிறைவு. அந்தக் கன்னிகை ஒரு ஆசனத்தைப் போட்டுக்கொண்டு அநேகர் முன் உட்கார்ந்துகொண்டு நான் உபந்நியாசம் செய்கிறேன், நீங்கள் கேளுங்கள் என்றால் அது அவளுக்கு நிறைவல்ல. ஆகையால் ஒவ்வொருவருக்கு ஒவ்வொன்று நிறைவு. அந்தந்த நிறைவே அவரவர்களுக்கு ஸ்வாமி. எந்தெந்த நிலையில் எது நிறைவோ அதில் ஸ்வாமி இருக்கிறார். அந்தந்த நிறைவு அவரவர்களுக்கு ஆனந்தமாக இருக்கும். அதுதான் ஸ்வாமி. நமது பெண்ணிடத்தில் நமக்குப் பிரேமை இருக்கிறது. அவளுக்கு அவளுடைய பர்த்தா விடத்தில் பிரேமை இருக்கிறது. அதது உத்கிருஷ்டம். எங்கு பிரேமை செல்லவேண்டுமோ அங்கு செல்லாமல் வேறிடத்தில் செல்லுமானால் அது நிகிருஷ்டம் ஆகிவிடும். அதாவது ரஸம் ஆபாஸமாகிவிடும். பானகத்தில் ஒரு பிடி உப்பையும் காரத்தையும் சேர்த்தால் அது ரஸாபாஸம். கவிகளுக்கும் அநேக ரஸம் உண்டு. இன்ன ரஸத்துக்கு அப்புறம் இன்ன ரஸம் வரவேண்டுமென்று விதி இருக்கிறது. ஸ்வரத்திலும் அப்படியே விதி உண்டு. சந்தோஷத்தைத் தர இன்ன ஸ்வரத்திற்குப் பிறகு இன்ன ஸ்வரம் வரவேண்டு மென்றிருக்கிறது. பிலாக்

கனம் ஸ்வரத்தினுல் தான் அமைகிறது. ஆனுல் ஸ்வர வரிசை வேறு. இக்காலத்தில் ரஸங்களைப் பற்றிய ருசியே ஜனங்களிடத்தில் மாறிப்போய் விட்டது. ஆகையால் தான் பாகவதர்கள் கதை சொல்லும் பொழுது அழுகையி லிருந்து திடீரென்று சிரிப்பிற்கு வந்து விடுகிருர்கள். என்? ஜனங்களின் ருசி கெட்டுப் போய் விட்டது. புகையிலையை தின்கிருர்கள். என்? நாக்கின் ருசி கெட்டுப் போய் விட்டது. அதன் பலனுக தர்மம் கெட்டுப் போய் விட்டது. தர்மம் கெட்ட பொழுது தர்மத்தை நமக்குக் காட்ட ஸ்வாமி அவதாரம் செய்வர் என்று விஸ்தாரமாக மகாஸ்வாமிகள் பேசிமுடித்தார்கள்.



# கோவில்களிலுள்ள கல்வெட்டுகள்.



நமது நாட்டிலுள்ள பழைய கோவில்சுவர்களில் ஏதோ எழுதியிருக்கிறது. அந்த எழுத்து சரியாகத் தெரியவில்லை. கர்ப்பக்ரஹங்களிலும் பிராகாரங்களிலும் இந்த எழுத்து காணப்படுகிறது. அதில் என்ன எழுதியிருக்கிறதென்று தெரிந்துகொள்ளாதவர்கள் புதையல்கள் இருக்குமிடங்கள் சுவர்களில் எழுதப்பட்டிருப்பதாகச் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். சில கிராமக் கோயில்களிலும் எழுதப்பட்டிருக்கிறது. நாம் அதைத் தெரிந்துகொள்ள முயற்சி செய்வதில்லை. அதை நாம் கவனிப்பதுமில்லை, கவனித்தாலும் அது புரிகிறதுமில்லை. கோயில்கள் எதற்காகக் கட்டப்பட்டிருக்கின்றன, அவைகளுக்கு ஆதாரமான கிரந்தங்கள் என்னவென்பதும் நமக்குத் தெரியாது. ஆனால் எந்த மதஸ்தர்களுக்காக இக்கோவில்கள் ஏற்பட்டிருக்கின்றனவோ அந்த மதஸ்தர்கள் தான் நாம். மற்ற மதஸ்தர்கள் இப்படி அசிரத்தை யுடையவர்களன்று. வேதமென்ன, புராணமென்ன, ஆகமமென்ன, தர்மசாஸ்திரமென்ன வென்பது நமக்குத் தெரியவில்லை. என் நாம் திருமண்

சென்னை அரண்மனைக்காரத் தெருவிலுள்ள ஸ்ரீகச்சபேசுவரர் ஆலயத்தில் (26-1-33) இரவு ஸ்வாமிகள் செய்த பிரசங்கம்.

இட்டுக்கொண்டிருக்கிறோம், அல்லது ஏன் விபூதி பூசிக் கொண்டிருக்கிறோம், அல்லது ஏன் பூணூல் தரித்துக் கொண்டிருக்கிறோம் என்ற காரணங்களை நாம் அறிய மாட்டோம். நமது மத அனுஷ்டானங்களில் சீர்திருத்தம் செய்ய விரும்புகிறவர்கள்கூட இவ்விஷயங்களைத் தெரிந்துகொண்டு பிறகு சீர்திருத்தம் செய்ய முற்பட்டால் நலமாகவிருக்கும். மதக் கிரந்தங்களைப் படித்தவர்கள் லௌகீக விஷயங்களை அறியாதவர்களாகவிருக்கிறார்கள். படிக்காதவர்கள் தீவிரமான வேகமுள்ளவர்களாக இருக்கிறார்கள். அவர்களும் படித்துவிட்டால் நன்றாக வேலை செய்யமுடியும்.

மற்ற தேசங்களில் வியாபகஸ்தர்கள் ஜனங்களின் அபிப்பிராயத்தையே எடுத்துச் சொல்லுகிறார்கள். ஜனங்களின் அபிப்பிராயங்களும் அனுஷ்டானமும் ஒன்று, வியாபகஸ்தர்களின் அபிப்பிராயமும் அனுஷ்டானமும் வேறு என்பது மற்ற மதஸ்தர்களில் இல்லை. ஆகையால் அவர்கள் எடுத்த காரியம் கை கூடுகிறது. நமது மதத்தில் ஜனங்களுக்கும் வியாபகஸ்தர்களுக்கும் சம்பந்தமில்லை.

நம்முடைய ஜனங்களில் 100-க்கு 95 பெயர்கள் தீர்த்தயாத்திரை, சிராத்தம், கோவில், சுஜாதிவிவாகம் ஆகியவைகளை அனுஷ்டிக்கிறவர்கள். நமது வியாபகஸ்தர்களுக்கு இவ்விஷயங்களில் நம்பிக்கையில்லை.

சீர்திருத்தக்காரர்களும் சரி, அனுஷ்டானம் செய்வோர்களும் சரி, புஸ்தகங்களைப் படித்துப் பார்க்க வேண்டும். பௌத்தம் சண்டமாருதம்போல் மோதியும், நமது மதம் அப்படியே இருக்கிறது. அதற்குக்

காரணமென்ன? நமது மதத்தை நன்ருகத் தெரிந்து கொண்டால் தான் அது விளங்கும். அப்படித் தெரிந்து கொண்டவர்கள் ஜன நாயகர்களாக வரின், அவர்கள் தொடங்கும் காரியத்துக்கு ஆதாவிருக்கும். புஸ்தகங் களைப் படித்து விஷயங்களை அறிந்தவர்களிடத்தில் கோபங்கொள்ளாமல் அவைகளை படிக்கவேண்டும். நமக்கேற்பட்ட ஆசாரங்கள் என்ன என்று தெரிந்து கொள்ளவேண்டும். அதைத் தெரிந்துகொண்டு அனுஷ் டானம் செய்துகொண்டு மாத்திரம் இருந்துவிடக் கூடாது. பொது வேலைகளில் ஈடுபடவும் வேண்டும். மகாராஷ்டிரர்கள் யுத்தகளத்திலும் மாத்தியான்னிகத்தை யும் சிவ பூஜையையும் விடவில்லை. மகத்தான யுத்த காலத்தில் போர்க்களத்தில் தங்கள் முன்னோர் பூஜித்த மூர்த்தி என்று தஞ்சாவூரில் அநேகர் எனக்குத் தங்கள் வீடுகளிலுள்ள மூர்த்திகளைக் காட்டியிருக்கிருர்கள். எத்தனையோ ஆயிரம் வருஷங்களாக வந்திருக்கிற கர்மாக்களை நமக்கு 100 ரூபாய் சம்பளமாகிவிட்டதால் செய்யமுடியவில்லை என்று சொல்வது பெரிய விபரீதம். உத்தியோகம் தன்னை ஆகாசத்தில் தூக்கிவிட்டு விட்ட தாக நினைத்துக்கொண்டு விடக்கூடாது. நமது மதங் களின் ஆசாரங்களை ஜனங்கள் தெரிந்துகொண்டு ராஜீய காரியங்களில் என்று தோள் கொடுக்கிருர்களோ அன்றுதான் விடியும். மற்ற மதஸ்தர்கள் இரண்டு வருஷமாவது தங்களுடைய மதப் படிப்பைப் படிக்கிருர் கள். மத நூல்களை நாம் எவ்வளவு அறியமாட் டோமோ அவ்வளவு அவைகளைப்பற்றி அபிப்பிராயம் சொல்ல யோக்கியதையுள்ளவர்கள் என்று நினைத்துக்

கொண்டுவிடுகிறோம். நமது கலாசாலைகளில் படிக்கிற குழந்தைகள் நமது சாஸ்திரங்களைப்பற்றிப் பெரிய பிரணமாக இருக்கிறார்கள். இந்த ஸ்திதி போக வேண்டும். நமது கோவில் சுவர்களில் எழுதியிருப்பதைப் படிக்க நீங்கள் தெரிந்துகொண்டால், நான் சொல்வதை ஆமோதிப்பீர்கள்.

கோவில் எழுத்தைப் படிக்க நான் சிலாசாஸன ஆராய்ச்சி இலாகாவிடமிருந்தே தெரிந்துகொண்டேன். கோவில்களில் பதிவுசெய்யப்பட்டிருக்கிற சாஸனங்களை எல்லாம் அவர்கள் படித்திருக்கிறார்கள். ஆனால் விஷயத்தை முற்றிலும் நமக்குத் தெரிவித்துவிடவில்லை. கோவில் சுவர்கள் எல்லாம் ஸப் ரெஜிஸ்டிரார் ஆபீஸ். முற்காலத்தில் அவனவன் செய்த தானதர்மங்கள், கோவில்களுக்குக் கொடுத்த சொத்துக்கள் முதலிய விவரங்கள் கோவில் சுவர்களில் பதியப்பட்டிருக்கின்றன. ஒரு சொத்தை ஒருவன் கோவிலுக்கு எழுதிவைத்துவிட்டு ராஜாவுக்குத் தெரிவித்துவிட்டால், அந்த சொத்தை "இறையிலி" யாக ராஜா செய்துவிடுவார். "இறை" என்றால் ராஜாவுக்குச்செலுத்தவேண்டிய வரி, 'இறையிலி' என்றால் வரியில்லாதது என்று அருத்தம். ஒவ்வொரு கிராமமும் ஒரு குடி அரசாகவிருந்தது. சில சபைகள் நிர்வாகங்களை நடத்திவந்தன. ஜனங்களின் ஓட்டின்படியே கிராம நிர்வாகம் நடத்தப்பட்டு வந்தது. ஓட்டுபோடுவதற்கு "ஓலை எடுப்பது" என்று பெயர். உத்தரன் மேரூர் கோவில் சுவர்களில் சபாவிதிகள் பூர்ணமாகச் செதுக்கப்பட்டிருக்கின்றன. "வேதமும் மந்திரப் பிராமணமும் வல்லானே" தேர்தலில் அபேட்சகனாக

நிற்கலாமாம். அவனுடைய பந்துக்களில்யாரும் மகா பாபம் எதையும் செய்திருக்கக் கூடாதாம், உறவினர் பாவம் செய்திருந்தால் தேர்தலில் அபேட்சகனாகநிற்பதற்கு யோக்கியதில்லை. ஒவ்வொரு ஆலயத்திற்கும் அருகில் சதுர்வேதி மங்கலம் என்று இருந்தது. அதில் பிராமணர்கள் வசித்து வந்தார்கள். சிவ பக்தர்களோ விஷ்ணு பக்தர்களோ கோவில் கஜான்ஜியாக இருந்து வந்தனர். அவர்களுக்கு ஸ்ரீபண்டாரத்தார் என்று பெயர். (பண்டாரம்பொக்கிஷம்) அக்கிரகாரத்திற்குப் பக்கத்தில் பண்டாரவாடை இருந்தது, சதுர்வேதி மங்கலத்தில் நாலைந்து சபை இருந்தது. ஒவ்வொன்றும் ஒவ்வொரு காரியத்துக்காக ஏற்பட்டது. அவர்கள் "சபையோம்" என்று கையெழுத்து போடுவது வழக்கம். வர்த்தகர்கூடி வசித்த இடத்திற்குப்பேட்டை என்றுபெயர். யுத்தவீரர்களின் வாஸ ஸ்தலம் பாளயம். ராஜாக்கள், மறைவர்கள், படையாட்சிகள், நாயக்கர்கள் முதலிய வீரர்கள் பாளயங்களில் வசித்து வந்தார்கள். உடையார் பாளயம் என்பது ஒரு உதாரணம். அக்கிரஹாரம் என்பது ஒரு கோடியில் சிவன் கோயிலையும், மற்றக்கோடியில் விஷ்ணு கோவிலையும் உடைய தெரு. 'அக்கிரம்' என்ற வடமொழிச் சொல்லுக்கு நுனி என்பது அருத்தம். இப்படியெல்லாம் தொழில் பிரிவினை ஏற்பட்டு கிராம வேலைகள் நடந்துவந்தன. சாஸனங்களில் "இவ்வூர் சபையோம்', என்று சில பிராமணர்கள், கணக்கன், ஸ்ரீ பண்டாரத்தார் ஆகியவர்கள் கை எழுத்துபோட்டிருப்பதை நீங்கள் பார்க்கலாம். ராஜாவின் உத்தரவை அவர்கள் ஏற்றுக்கொண்டதற்கு அது அடையாளம். ராஜாவின் உத்தர

வில் "செம்பிலும் கல்லிலும் வெட்டிக்கொள்க." என்று எழுதப்பட்டிருக்கும். அதை எழுதி அனுப்பின உத்தியோகஸ்தருக்குத் "திருமந்திர ஓலை" என்று பெயர் வழங்கிற்று. இக்காலத்தில் அந்தரங்கக் காரியதரிசி என்கிறோம். ஓலையில் உத்தரவுகளை அவர் எழுதி வந்ததால் திருமந்திர ஓலை என்ற பெயர் வந்தது. மந்திரம் என்று சொல்லுக்கு இராஜாவின் அரண்மனை என்று அர்த்தம். நமது தேசத்தில் எல்லா விதமான ராஜாங்கங்களும் இருந்தன. கிராமங்கள் முழுக்குடியாசாக விருந்தன. ஆகையால் அவைகளின் நிர்வாகத்தில் ராஜாவுக்கு வேலையில்லை. வரியை வாங்கி தேசக்ஷேமத்திற்குச் செலவிட வேண்டியதே அவருடைய வேலை. குடியாசு அங்கத்தினர்கள் எல்லோரும் தெரிந்தெடுக்கப்பட்டவர்கள். நியமனமே யிருந்ததில்லை. வேறு வேலையில்லாததால் ராஜா தான தர்மங்களைச் செய்துகொண்டிருப்பார் கோவில் கட்டி, குளம் வெட்டி, சத்திரம் போட்டு, பாடசாலை வைத்து ஜனங்களுக்கு ஹிதமான காரியங்களை அவர் செய்து வந்தார். நவரத்தின கிரீடந்தரித்த ராஜா ஏழைப் பிராமணனை வணங்குவர். ஆகையால் ஏழை உயர்ந்தவனாகவும், பணக்காரன் மட்டமாகவும் பாவிக்கப்பட்டனர், இக்கால அபேதவாதப்படியோ (Socialism) எல்லோரும் ஏழைகளாகி விடவேண்டும்! அக்காலத்தில் பஞ்சமென்பது அதிகமில்லை. போக்குவரத்து சாதனங்கள் அதிகப்பட்டபிறகே உலகில் எங்கு பார்த்தாலும் எக்காலத்திலும் பஞ்சத்தின் கஷ்டம் அநுபவிக்கப்படுகிறது. இப்படி யெல்லாம் இருந்ததை சுவர்களில் எழுதப்பட்டிருப்பதிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

முற்கால சிலாசாஸனங்களைப் பார்த்தால் "ஸ்வஸ்திஸ்ரீ" என்று ஸம்ஸ்கிருதத்தில் ஆரம்பித்து இன்ன ராஜாவின் இத்தனையாவது ஆண்டில் இன்ன மாதம் இன்ன தேதியில் ராஜா இன்ன காரியம் செய்து கொண்டிருக்கையில் இன்னார் கேட்டுக்கொண்டது போல் உத்தரவு செய்தார் என்று சொல்லிவிட்டு உத்தரவு முழுமையும் போட்டிருக்கும். இப்படி ஜனங்களும் ராஜாங்கமும் தானம் செய்ததால் கோவில்கள் சம்ரக்ஷிக்கப்பட்டுவந்தன. அந்தக் கோவில்களைப் பழுது பார்க்கவும் இப்பொழுது நம்மால் முடியவில்லை. முன்னாளில் அந்தந்தக் கிராமத்தார் தாங்களும் ஜீவனம் செய்துகொண்டு கோவில் கட்டியும் வந்தார்கள். சிலாசாஸன ஆராய்ச்சி இலாக்கா உத்தியோகஸ்தர்கள் இந்தச் சாஸனங்களையெல்லாம் படித்து நகல் எழுதிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் எந்த சாந்நியை உத்தேசித்து இவ்வளவு பணம் செலவு செய்துவந்தனர் என்பதை அவர்கள் கவனிப்பதில்லை. பணம், புத்தி இரண்டையும் ஏராளமாகச் செலவு செய்து பூர்வீகர்கள் அடைந்த பலனை நாம் ஏன் அடையக்கூடாது.

சுவரில் எழுதியிருப்பதற்கெல்லாம் ராஜாவின் திருமுகம் என்று பெயர்.

நமதாசாரியாள் ஓலைகளுக்கும் ஸ்ரீமுகமென்று வழங்கிவந்தது. ஆகையால் தான் நாங்கள் ஏதேனும் எழுதி அனுப்பினால் ஸ்ரீமுகம் வந்துவிட்டது என்கிறீர்கள். நமது ஆசார்யாள் 56 தேச ராஜாக்களாலும் மதிக்கப்பட்டவர். 32-வயது வரையில் தான் அவர்கள் இருந்தார்கள். 12 வயதுக்கு மேற்பட்டு லோக

சஞ்சாரஞ் செய்ததாக வைத்துக்கொண்டாலும், இருபது வருஷகாலத்தில் பரதக்கண்டத்திலிருந்த 56 தேசங்களும் போய் ஆங்காங்கு வேதவிருத்தமான அபிப்பிராயமுடைய பண்டிதர்களை ஜயித்து துர்மதங்களை ஓட்டி அத்வைதமதத்தை ஸ்தாபித்தார்கள். அத்வைத மதந் தவிர வேறுமதமில்லாமற் செய்துவிட்டார்கள். இப்பொழுதுள்ள த்வைதம், விசிஷ்டாத்வைதம் முதலிய சித்தாந்தங்கள் நமதாசார்யாள் காலத்திற்குப் பிறகு ஏற்பட்டவை. அவர்களுடைய காலத்தில் 72 துர்மதங்கள் இருந்தனவாம். அவைகளில் ஒன்றுவது இப்பொழுதில்லை. அப்படிச் செய்தவர்களால் ஸ்தாபிக்கப்பட்ட மடம் தங்களுடையது என்று ஜனங்களுக்கு ஆசை ஏற்பட்டு அது இரத்தத்தில் ஊறிப்போயிருக்கிறது. அவர்களுடைய பேரின் மகிமை அதற்குக் காரணம். நமது ஆசார்யாள் விருதுகளில் "நிகில பாஷண்ட ஷண்ட கண்ட கோத்காடனேன, வீசதீக்ருதவேத வேதாந்தமார்க்க ஷண்மத ப்ரதிஷ்டாபகாசார்யாணும்" என்று இருக்கிறது. வேத வேதாந்த மார்க்கத்தில் முன்போல் இருந்த பல பாஷண்ட மதங்களை நீக்கி ஷண்மத ஸ்தாபனம் செய்தவர் என்பது அதன் அருத்தம். அவர்கள் நிலை நிறுத்தின வேதமார்க்கம் வேதாந்த மார்க்கம் ஆகிய இரண்டு வழிகளையும் நாங்கள் தேசத்தவருக்கு உபதேசிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். வேதாந்தம் படித்தாலும் ஆசை போகவில்லை, கெட்ட எண்ணம் போகவில்லை. வேதாந்தம் படிப்பதால் அடையக்கூடிய பலனைப் பெறப் பக்குவ மேற்படும்படி வைதீக கர்மாக்களைச் செய்ய வேண்டும். செய்யும்

போது பலனை எதிர்ப்பார்த்துச் செய்யக்கூடாது, லௌகிக கர்மாக்களையும் அப்படியே செய்யவேண்டும். இதர தேசத்தாரின் அபிப்பிராயங்களுக்குப் பயப்படாமல் நமது சாஸ்திரங்களின் கருத்துக்களை அவர்கள் ஒப்புக்கொள்ளும்படி நாம் செய்யவேண்டும்.



# ஞானம்பிகை.



சிவன், விஷ்ணு, அம்பாள், விக்நேசுவரர் என்ற ஸ்வாமிகளைப் பற்றிப் புராணங்களும் ஆகமங்களும் சொல்லுகின்றனவேயல்லாது, வேதம் அதிகம் சொல்ல வில்லை என்று இங்கிலீஷ் படித்த முறையில் ஆராய்ச்சி செய்கிறவர்கள் சொல்லுகிறார்கள். சிவன், விஷ்ணு முதலிய தேவர்களைப் புராணங்களில் பெரிதாகச் செய்து விட்டார்கள் என்று அவர்கள் சொல்லுகிறார்கள். இப்படி அவர்கள் சொல்வது சரி அல்லது தப்பு என்று சொல்வோரில்லை. ஆகையால் அவர்களுடைய அபிப் பிராயம் தீர்மானமாகிவிடுகிறது. ஆகையால் இந்தக் கட்சிக்கு ஆட்சேபமில்லை என்று அவர்கள் நினைத்துக் கொண்டு விடுகிறார்கள். இந்த அபிப்ராயம் தப்பானால் அதன்மேல் செய்யப்படும் முடிவும் தப்பாகிவிடும். அவர்கள் சொல்வது தப்பென்று நினைக்கிறவர்கள் சும்மா விருந்துவிடுகிறார்கள். வேதத்தின் ஞானபாகம் உபநிஷத்துகள். அந்த உபனிஷத்துகளில் ஆத்மா என்றும் பிரும்மமென்றும் சொல்லப்பட்டிருக்கிறதே யல்லாமல் சிவன் என்றும் விஷ்ணு என்றும் சொல்லப்

---

சென்னை முத்தியாலுப்பேட்டையில் பவழக்காரத் தெருவி லுள்ள ஸ்ரீ காளஹஸ்தீசுவரர் கோவிலில் 1933ஷ ஜனவரி 29உ ஞாயிற்றுக்கிழமையன்றிரவில் ஸ்வாமிகள் செய்த உபந்யாஸம்.

பட்டிருக்கவில்லை. கர்மகாண்டத்தில் சொல்லப்பட்டிருப்பினும், இந்திரன், வருணன் முதலிய தேவர்களைப் போல் அவர்களும் சொல்லப்பட்டிருக்கிறார்களே யல்லாமல் அவர்கள் பரமாத்மா என்று சொல்லப்பட்டிருக்கவில்லை என்கிறார்கள். தேவர்கள் கோஷ்டியில் சிவ விஷ்ணுக்களும் உண்டென்று ஒப்புக்கொள்ளலாமே யல்லாமல் அவர்களைப் பரமாத்மாவாகக் கொள்ள முடியாது என்கிறார்கள். பிரும்ம சமாஜம், ஆர்ய ஸமாஜ மென்றவைகள் இப்படி நினைத்துக்கொண்டே சிவனையும் விஷ்ணுவையும் ஒதுக்கிவிட்டார்கள். அந்த சமாஜங்களேற்பட்டுச் சற்றேறக்குறைய நூறு வருஷங்களாகிவிட்டன.

முக்கியமான உபநிஷத்துகளில் ஜகத்தைச் சிருஷ்டித்த வஸ்துவைப்பற்றிச் சொல்லும்போது, ஆத்மா என்றும் பிரும்மமென்றுமே சொல்லப்பட்டிருக்கிறது. உபநிஷத்துகள் 108 என்று சொல்லுவதுண்டு. அவைகளில் ஒவ்வொரு ஸ்வாமிக்கும் ஒரு உபநிஷத் தனியாக இருக்கிறது. ஆனால் அவைகளைப் பிரஸ்தாபக் கட்சிக்காரர்கள் ஒப்புக்கொள்ளமாட்டார்கள்.

நமதாசார்யர்களும் பத்து உபநிஷத்துகளுக்கே பாஷியம் செய்திருக்கிறார்கள். துவைதமத மத்வாசாரியாளும் அத்வைதமத நமதாசார்யாளும் 10 உபநிஷத்துகளுக்குப் பாஷியம் செய்திருக்கிறார்கள். ஸ்ரீ ராமானுஜர் உபநிஷத்துகளுக்குத் தனியாக பாஷ்யம் செய்யவில்லை; மற்ற கிரந்தங்களில் பத்து முக்கியமென்று அங்கீகரித்திருக்கிறார். ஈச, கேன, கட,

பிரச்ன, மாண்டுக்ய, முண்டக, தைத்திரீய, பிரஹதாரண்யக, சாந்தோக்ய, ஸுபால, இப்பத்தும். முதல் உபநிஷத் ஈசாவாஸ்யம் எனப்படும். ஈச என்ற சப்தம் அதில் முதலாவதாக வருவதால் அது ஈசாவாஸ்யம் என்று சொல்லப்படுகிறது. இரண்டாவது உபநிஷத் கேனம். ஆத்மா யார், அது குண மெடுத்துக்கொண்டால் அதன் பெயரென்ன, ஸ்வரூபமென்ன? ரூபநாமமில்லை என்ருல் பிரும்மம் என்று சொல்லிவிடலாம், ஆனுல் அனுக்ரஹார்த்தம் ரூபமெடுக்கும்போது அதன் பெயரென்ன, ரூபமென்ன என்று கேனேபநிஷத் சொல்ல ஆரம்பித்து ஒரு கதையைச் சொல்லியிருக்கிறது. கதை என்னவெனில், ஒரு காலத்தில் தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் யுத்தம் நடந்தது, பரமாத்மா தேவர்களுக்குச் சகாயமாயிருந்தார். தேவர்கள் ஜயமடைந்துவிட்டனர். பரமாத்மா அவர்களுக்குச் சகாயஞ் செய்தது அவர்களுக்குத் தெரியாது. ஜயமடைந்தவுடன் தேவர்கள் கூடித் தங்களுடைய வெற்றியைக் கொண்டாடினுர்கள். அப்பொழுது அவர்கள் தங்களை மெச்சிக்கொண்டார்கள். அகம்பாவத்தால் அசுரகுணத்தை அவர்கள் அடைந்து விடுவார்களே என்று பகவான் நினைத்து அவர்களுக்குச் சத்புத்தி புகட்டுவதற்காகச் சிறிது தூரத்தில் ஒரு பெரிய ஸ்வரூபமாகத் தாம் நின்ருர். அதன் அடிமுடி ஒன்றும் தேவர்களுக்குத் தெரியவில்லை.

அது என்னவென்றும் அவர்களுக்குத் தெரியவில்லை. அந்த ரூபத்துக்கு யட்சம் என்று பெயர். தெவதைகளின் சக்தி அதிகமுள்ள அக்னியை அந்த

யட்சத்தினிடம் அவர்கள் அனுப்பி, அது என்னவென்று தெரிந்துகொண்டு வரும்படி சொன்னார்கள். அக்னி சமீபத்தில் போகுமுன்னர் அந்த யட்சமே அவரைப் பார்த்து "நீ யார்" என்று கேட்டது. "நான் அக்னி, எனக்கு ஜாதவேதஸ் என்று பெயருண்டு" என்று அக்னி சொன்னார். "உன்னுடைய சக்தி என்ன" என்று யட்சம் கேட்டது. "நான் எதையும் எரித்து பஸ்மமாக்கிவிடுவேன்" என்று அக்னி சொன்னார். "அப்படியானல் இதை எரி" என்று யட்சம் சொல்லி ஒரு துரும்பை அவரிடம் போட்டது. தன்னுடைய சக்தியை யெல்லாம் உபயோகப்படுத்தியும் அக்னியால் அத்துரும்பை எரிக்க முடியவில்லை. அதன்மேல் அவர் வெட்கமடைந்து தேவர்களிடம் திரும்பிவந்து நடந்த விஷயத்தைச் சொன்னார். அதன்மேல் தேவர்கள் வாயுவை யட்சத்தினிடம் அனுப்பினார்கள். வாயுவை யட்சம் கேட்ட கேள்விக்குத் தான் எதையும், ஜகத்தையுங் கூடத் தூக்கிக்கொண்டு போய்விட முடியுமென்று அவர் பதில் சென்னார். ஒரு துரும்பை அவர் முன் யட்சம் எறிந்து அதைத் தூக்கும்படி சொன்னது. வாயுவால் முடியவில்லை. அவரும் திரும்பிப் போய் விட்டார். அதன்மேல் தேவராஜனாகிய இந்திரனே போனான். அப்பொழுது யட்சம் மறைந்துவிட்டது. இந்திரன் அதைக் காணாது திகைக்கையில் "உமா, ஹைமவதீ" அவன்முன் திவ்யமங்கள ஸ்வரூபியாகத் தோன்றினாள். ஜகன்மாதாவைத் தரிசனம் செய்தவுடன் அஹம்பாவமொழிந்து இந்திரன் நமஸ்காரம் செய்துவிட்டு, இங்கு ஒரு ரூபம் நின்றதே அது என்ன

வென்று கேட்டான். "நீங்கள் கண்டதுதான் பர மாத்மா" என்று அறிவித்தாள் அம்பிகை. ஸர்வக்ஞ ஞகிய ஈசுவரனுடன் அம்பிகை கலந்திருக்கிருள் என்று ஆசார்யாள் இந்த இடத்தில் வியாக்கியானம் செய்திருக் கிருர். கேனேபநிஷத்தில் இந்தக் கதை சொல்லப்பட் டிருப்பதில் ஹைமவதி என்ற சொல் உபயோகிக்கப்பட் டிருப்பதிலிருந்து ஹிமயகிரியின் மகள் அம்பிகை என்ற புராணக் கதையை இந்த உபநிஷத் ஆதரிக்கிறதென்பது தெரிகிறது. புராணங்கள் வேதார்த்தத்தைத் தெரிவிக் கின்றன. பிரஸ்தாபக் கதையைத் தெரிவிக்க ஒரு புராணம் இருக்கிறது. நான் காளஹஸ்திக்குப் போயிருக் கையில், கிரிப்பிரதட்சிணம் செய்துகொண்டு வருகையில் பாதி வழியில் ஒரு மலைமேலேறி அங்கு ஒரு வனத்தி லுள்ள ஒரு சிவலிங்கத்தை தரிசிக்க வேண்டுமென்று சொன்னுர்கள். அந்த லிங்கம் ஸஹஸ்ர லிங்கம். அதி லுள்ள 1008 லிங்கங்களில் ஒன்று வெளுப்பாக இருக்கிறது, அதன் பெயர் யட்சேசுவரர்; இந்திர லிங்கம் என்று ஒரு லிங்கமும் இருக்கிறது. அந்தப் புராணத்தில், யட்சமிருந்த விடம், தேவதைகள் கூட்டம் கூடின இடம் முதலிய எல்லாம் சொல்லப்பட் டிருக்கின்றன. தேவதைகள் கண்ட ஸ்வரூபந்தான் பரமேசுவரன் என்று அம்பிகை அவர்களுக்கு ஞானுப தேசம் செய்தவளாகையால், காளஹஸ்தியில் அம்பா ளுக்கு ஞானும்பிகை என்று பெயர் ஏற்பட்டிருக்கிறது.

சிவன் என்றும் விஷ்னு என்றும் அம்பிகை என்றும் வேதத்தின் ஞானகாண்டத்தில் சொல்லப் பட்டிருக்கவில்லை என்றும், புராணங்கள் சாதாரண

தேவதைகளைப் பெரிதாக்கிவிட்டன என்றும் சொல்லுகிறவர்கள் கேனோபநிஷத்தில் சொல்லப்பட்டிருப்பதைக் கவனித்து உண்மையைத் தெரிந்துகொள்ளவேண்டும். ஒரு வித்வான் சொல்லிவிட்டார் என்று ஒன்றை நம்பிவிடக்கூடாது. குருமுகமாக அத்யயனம் செய்து படித்த பெரியவர்கள் பலர் சொல்வதே சரியென்று எடுத்துக்கொள்ளவேண்டும். சீமையில் ஸர் ஆலிவர் லாட்ஜ் என்ற பெரிய விக்ஞான பண்டிதர் இறந்து போனபிறகும் ஜீவன் இருக்கிறது என்று சொல்லுகிறார். அதை மற்ற விக்ஞான பண்டிதர்கள் ஒப்புக்கொண்டு விடவில்லை. அப்படியே நாமும் ஒரு வித்வான் ஒன்றைச் சொல்லுகிறார் என்று அதை எடுத்துக்கொண்டு விடக்கூடாது.

ஊடுருவிப் பார்க்கவேண்டும். பரப்பிரம்மம் ஒரு சமயத்தில் லட்சுமி சகாயர், ஒருசமயத்தில் அம்பாள் சகாயர், ஒருசமயத்தில் ஸரஸ்வதி சகாயர் என்று சொல்லப்பட்டிருக்கிறது. பார்வதியும் பரமேசுவரனும் பரப்பிரும்மம்; லட்சுமியும் விஷ்ணுவும் பரப்பிரும்மம், ஸரஸ்வதியும் பிரும்மாவும் பரப்பிரும்மம், ஒவ்வொரு இடத்தில் ஒரு பாவம் அதிகமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. மற்றது இல்லை என்று வைத்துக்கொண்டுவிடக்கூடாது. ஒரு திருஷ்டாந்தம் சொல்லுகிறேன்.

நீலகண்ட தீட்சதர் என்று மதுரையில் திருமலை நாயகரிடத்தில் மந்திரியாகவிருந்தார். அவர் காலத்தில்தான் திருமலைநாயகர் மண்டபம் கட்டப்பட்டது. ஆரணிக்கருகிலுள்ள அடயபலம். அவருடைய சொந்த

ஊர். தஞ்சாவூர் ஜில்லாவில் படித்து வித்வானுகி மதுரையில் உத்யோகத்திலிருந்தார். அவர் ஒரு சுலோகத்தில் *"ஒரு காவியத்தின் அழகைப்பார்த்தால் ஸரஸ்வதியின் பொக்கிஷம் காலியாகி இருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. ஆனுல் ஸரஸ்வதியின் பொக்கிஷத்தைப் பார்த்தால் மலை மலையாகவுள்ள குவியல்களில் காவியத்தின் அழகு ஒரு சிறுமூட்டை என்று தெரிகிறது" என்று சொல்லியிருக்கிருர். ஆகையால் ஒரு இடத்தில் ஒரு பாவத்தை அதிகமாகச் சொல்லியிருப்பதிலிருந்து, அப்பால் வேறில்லை என்று நினைத்துக்கொண்டு விடக்கூடாது. இந்த நீலகண்ட தீட்சதர் திருவிளையாடற் புராணத்தை ஸம்ஸ்கிருதத்தில் செய்திருக்கிருர். அதை அவர் அர்ப்பணம் செய்கையில் "எனது ஆத்மாவை மலயத்வஜ பாண்டிய குமாரியினுடைய சரணங்களில் அர்ப்பணம் செய்துவிட்டேன். இந்தக் கிரந்தத்தை இரண்டு பெயர்களுக்கும் அர்ப்பணம் செய்துவிட்டேன்" என்று சொல்லியிருக்கிருர். † காளஹஸ்தி ஞானும்பாளில் ஆரம்பித்து மதுரை மீனுட்சியிடம் வந்துவிட்டோம்.

---

* पश्येयमेकस्य कवेः कृतिञ्चेत्
सारस्वतं कोशमवैमि रिक्तम् ।
अन्तः प्रविश्यायमवेक्षितश्चेत्
कोणे प्रविष्टा कविकोटिरेषा ॥

† मलयध्वजपाण्ड्य कन्यका चरणद्वन्द्व निवेशितात्मना ।
शिवयोः कविनेदमर्पितं शिवलीलार्णव काव्यमद्भुतम् ॥

நமது தேசத்தில் புஸ்தகங்களை அர்ப்பணம் செய்வதுகூட ஸ்வாமிக்கே செய்துவந்தார்கள். தோட்டம் போடுவது ஸ்வாமிக்கே. பலர் உட்கார்ந்துகொண்டு ஊர் வம்பு வளர்க்கத் தோட்டம் போட்டதில்லை. இக்காலப் பார்க்குகளிலுள்ள விருட்சங்களில் வாசனையுள்ள புஷ்பங்களுமில்லை, பழங்களுமில்லை, ஸ்வாமிக்குமில்லை, நமது வயிற்றுக்குமில்லை. நமது தேச சங்கீதமும் ஈசுவரார்ப்பணமே. பாட்டெல்லாம் ஈசுவரன் பேரில்தான். சில்ப சாஸ்திர ஞானம் கோவில் கட்டவே உபயோகிக்கப் பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட ஞானத்திற்கெல்லாம் இருப்பிடமாகிய ஞானம்பிகை உபநிஷத்தில் திவ்ய மங்களஸ்வரூபியாக விளங்குகிறாள். அவளைத் தியானம் செய்து அருள் பெறுவோம் என்று ஸ்வாமிகள் சொல்லி முடித்தார்கள்.



# சக்தியளவு சிறிது தர்மம்

நமது தர்மங்களைப்பரிபாலிக்க நமது மதத்தில் ராஜாக்கள் இல்லை; ஆகையால் ஜனங்கள்தான் சிரத்தை எடுத்துக் கொள்ளவேண்டும்; ஆனால் அவர்களுக்கு சக்தியில்லை. ஆயினும் தர்மங்கள் சோரும்படி நாம் விடக்கூடாது. இருக்கிற சக்தியைக்கொண்டு சாத்தியமாகும்வரையில் செய்யவேண்டும். ஒவ்வொருவனும் அவனுடைய ஆயுளில் ஒரு தர்மமாவது செய்யவேண்டும். கொஞ்சமேனும் செய்யவேண்டும் .கோடிஜனங்களும் அப்படிச் செய்தால் தர்மத்திற்குக் குறைவேயிராது. புருஷர்கள் ஒவ்வொருவரும் ஒரு உண்டி வைத்து அதில் தினம் காலணாவோ அல்லது சக்திக்குத் தகுந்தபடியோபோட்டுக்கொண்டு வந்தால் 20 வருஷங்கழித்துப் பெரிய தர்மத்தைச் செய்யமுடியும். ஸ்திரீகளும் தினம் சிறிது அரிசியோ அல்லது வேறெதையோ போட்டுக்கொண்டு வந்தால் அதுவும் பெருகிவிடும். இன்று வெள்ளிக்கிழமையாகையால் இதைச் சொல்லவேண்டுமென்று நினைத்தேன். பணக்காரர்களாக வுள்ளவர்கள் நிரம்பச்செய்யட்டும், எழை ஒரு பைஸாவர்வது ஒதுக்கி வைக்கட்டும். அப்பொழுது நமது மத ராஜாக்களில்லாத குறை இராது.

---

சென்ற ஜனவரி மாதம் 27-ந்தேதியன்று சென்னை முத்தியாலுபேட்டையில் அரண்மனைக்காரன் தெருவில் ஸ்ரீகச்சபேசுவரர் ஆலயத்தில் ஸ்வாமிகள் செய்த உபன்யாசம்.

அவரவர்க்கு எது உத்கிருஷ்டம் என்று தோன்றுகிறதோ அந்தத் தர்மத்தைச் செய்யலாம். அப்படிச் செய்தால் நமது அந்திய காலத்தில் மனதுக்கு ஆநந்தமிருக்கும்.

நமதாசாரியாருடைய ஆக்ஞைப்படி வருகிறவர்களுக்கு ஏதேனும் உபதேசம் செய்யக்கடமைப்பட்டிருப்பதாக அடிக்கடி சொல்லுகிறேன், நான் ஒன்றைச் சொல்வதைக்காட்டிலும் அவர்களுடைய வாக்கைச் சொல்வது உத்தமமாக இருக்கும். அவர்களுடைய வாக்கைச்சொன்னால், அவர்கள் சொல்வதைக் கேட்பது போலிருக்கும். அவர்கள் செய்த கிரந்தங்கள் எல்லாம் ஸ்ரீரங்கம் வாணிவிலாஸ் அச்சுக்கூடத்தால் சாங்கர கிரந்தாவளி என்று அச்சிடப்பட்டிருக்கின்றன. அவைகளில் ஒன்று பிரச்னோத்தர ரத்னமாலே. பிரச்னம் என்றால் கேள்வி; உத்தரம் என்றால் பதில். ஆகையால் கேள்விகளும் பதில்களுமாகிய ரத்னமாலே என்பது அதன் அர்த்தம். இந்த மாலேயைக் கண்டத்தினுள் தரித்த எவர் அலங்காரமாகவில்லே என்று ஒரு சுலோகமிருக்கிறது. ருத்திராட்ச மாலே, துளஸிமாலே முதலியன கழுத்துக்குமேல் தரித்துக்கொள்ளப்படுபவை. இந்த மாலேயைக் கழுத்திற்குள் தரித்துக்கொள்ளவேண்டும், கருத்தில் இருத்தவேண்டும். அந்தக் கேள்வி பதில்களே வரிசையாகச் சொல்லுகிறேன். [ஜனவரி மாதம் 27ந் தேதி 28-ந்தேதி ஆகிய இரண்டு தினங்களிலும் மகாஸ்வாமிகள் பிரச்னோத்தர ரத்னமாலேக்குப் பொருள் கூறினார்கள். அவர்கள் சொன்னதுபோல் அது இப்புத்தகக் கடைசியில் சேர்க்கப்பட்டிருக்கிறது.]

# நகரமும் ஆஸ்திக்யமும்.

---

நான் ஊரூராகச் சுற்றிக்கொண்டுவருவதில் ஒவ்வொரு கட்டடத்தில் இறக்கிவிடுகிறார்கள். கூரை வீடுகளிலும் இறங்குவதுண்டு. கோவில் மண்டபங்களிலும் இறங்குவதுண்டு. சில இடங்களில் புகை ஜாஸ்தியாகவிருக்கும். ஸ்வாமிக்கு நைவேத்தியம் சமீபத்தில் வைக்க வேண்டியிருப்பதால் பூஜை செய்யும்போது புகை அதிகமாகவிருக்கும். இதிலிருந்து தப்பித்துக்கொள்ள அனுபவத்தில் ஒரு வழி கண்டுபிடித்தேன். அடுப்பண்டையில் படுத்துக்கொண்டுவிட்டால் அங்கு புகையிராது. கள்ளர்கள் அதிகமாகவுள்ள ஊரில் குடி புகுந்துவிட்டால், நமக்குக் கள்ளர்பயமில்லை. எது உபத்திரவமோ அதனடியில் போய்விடின், உபத்திரவமிராது.

பட்டணம் பெரிய நரகவாசமென்று கிராமங்களில் இருப்பவர்கள் சொல்வதுண்டு. பட்டணத்தில் வேதமில்லை, ஸ்நானமில்லை, ஆசாரமில்லை என்பார்கள். ஆனால் நாஸ்திக்யம் மலிந்துள்ளதென்று சொல்லப்படும் பட்டணத்தில் புகுந்துபார்த்தால் ஆஸ்திக்யம் மலிந்திருக்கிறது. கிராமங்களில்தான் இப்பொழுது ஸ்நான சந்தியாவந்தனமில்லை. காலை 8-மணிக்கு ஸ்நான கட்டங்களில் உட்கார்ந்துகொண்டு பல்தேய்த்து எங்கும் எச்சிலைத்

---

1933 ஞு ஜனவரி மாதம் 30-ந்தேதி பவழக்காரத்தெரு ஸ்ரீ காளத்தீசுவரர் கோவிலில் ஸ்வாமிகள் செய்த உபந்யாஸம்.

துப்புகிறார்கள். சீட்டாட்டம் பலமாகிவிட்டது. புகையிலை உபயோகமில்லாத ஊரில்லை; அவர்களுக்குக் குடும்பக்காரியமுமில்லை, வைதீகமுமில்லை. இங்கு எல்லோருக்கும் வேலையிருப்பதால் சோம்பேரித்தனமில்லை. பட்டணத்தில் அகப்பட்டுக் கொண்டு விட்டோமே என்ற நினைப்பால், ஸ்நானம் சந்தி செய்யவும் சிறிதாவது அத்யயனம் செய்யவும் ஆசையிருக்கிறது. இங்கு குழந்தைகள் ஆசார்யாளின் ஸ்தோத்திரங்களைச் சொன்னது நன்றாயிருந்தது. முன்னாளில் காலை 5-மணிக்கு எழுந்து சந்திரசேகராஷ்டகம், கோவிந்தாஷ்டகம் முதலியன சொல்வார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். சந்திரசேகராஷ்டகம் குழந்தைகள் சொல்ல இன்றுதான் கேட்டேன். குழந்தைகள் ஆநந்தமாகச் சொல்லும்படி நமதாசாரியாள் ஸ்தோத்திரங்களைச் செய்திருக்கிற அழகும் தெரியவந்தது. வேதாத்யயனமும் நன்றாக இருந்தது. பட்டணத்தில் இவைகளையெல்லாம் நேரில் பார்த்தபிறகு சந்தோஷமாக இருக்கிறது. இரவும் பகலும் பஸ்ஸென்று பஸ்கள் ஓடிக்கொண்டிருக்குமத்தியில் இப்படி இருப்பது சந்தோஷம்.

இந்தக் கோயில் தர்மகர்த்தாவாகிய செட்டியார் மிக விருத்தர். நிரம்ப பக்தியுள்ளவர். என்னிடத்தில் பலர் தங்களுடைய குடும்பக் குறைகளைச்சொல்லிக் கொள்வார்கள். அவர் அப்படிச் செய்யவில்லை. சிவராத்திரி உத்ஸவத்திற்கு உதவி செய்யும்படி உங்களுக்கெல்லாம் சொல்லும்படியே வேண்டிக்கொண்டார். இப்படிப்பட்டவர்களால்தான் ஆஸ்திக்யம் இன்னும் ஜீவித்திருக்கிறது. அவர்களால்தான் தர்மம் இன்னும்

நடைபெறுகிறது. இப்படிப்பட்டவர்கள் இரண்டொருவர் இருப்பினும், தர்மம் குற்றுயிராக இருப்பினும் கிளம்பிவிடும்.

இந்த ஞானம்பிகை கோவில் ஏழ்மைக் கோவில். ஏழ்மைத்தனமுள்ள இடத்திலேயே காரியங்கள் நன்கு நடக்கின்றன என்பதற்கு இந்தக் கோவில் உதாரணம்.

தஞ்சாவூர் ஜில்லா நீர்வளம் பொருந்தியது. வாய்க்காலில் வரும் ஜலத்தை வயலுக்குச் செலுத்த காலால் ஜலத்தை மறைத்தால் போதும். சேலம் முதலிய ஜில்லாக்களில் ஜலத்தைக் காண்பதரிது. ஏற்றம் போட்டு இறைக்கவேண்டும். அப்படிப்பட்ட சிரமமில்லாத தஞ்சாவூர் ஜில்லாவில், முக்கியமாக வரியில்லாத ஸர்வமான்யக் கிராமங்களில் சோம்பேறித்தனம் ஜாஸ்தியாகி தரித்திரம் குடிகொண்டு விட்டது. செட்டிநாட்டில் ஊரணி என்று குளத்துக்குப் பெயர். படித்துறை கட்டியிருப்பார்கள். சுற்றி விளக்கு போட்டிருப்பார்கள். ஆனால் ஊரணியில் ஜலமிராது. மார்வாரிகள் நாடாகிய மார்வாரிலும் ஜலமில்லை. இவ்விரண்டு நாடுகளிலும் ஐசுவரியம் மிகுந்திருக்கிறது. நாடுவளமுள்ளதல்லவாகையால் திரைகடலோடியும் திரவியம் தேடு என்று அந்த நாட்டு ஜனங்கள் பிரயாசிகளாக இருப்பதே அதற்குக் காரணம். நீர்வளம் நிலவளமுள்ள நாடுகளில் ஐசுவரியமில்லை. அப்படியே சிஷ்டாசாரம் பலிந்திருந்த ஊர்களில் இப்பொழுது ஒன்றுமில்லை. நாஸ்திகப் பட்டணத்தில் கர்மானுஷ்டானம் இருக்கிறது. ஆனால் இது போதாது. இந்தப் பெரிய பட்டணத்தில் சிலர் அத்யயனம் செய்வது போதாது.

பட்டணமெங்கும் செய்யும்படி செய்யவேண்டும். தர்ம கர்த்தா செட்டியார் நல்லவராகத் தோன்றுகிறது. அவருடன் ஒத்துழைத்து கோவில் காரியங்கள் நன்றாக நடக்கும்படி செய்யவேண்டும். எல்லோரும் அத்யயனம் செய்யவேண்டும். ஆசாரியாள் ஸ்தோத்திரங்களைப் பாடம் செய்யவேண்டும். ஆலயங்கள் சரியாக நடக்கும்படி செய்யவேண்டும். எல்லோரும் க்ஷேமமாக இருக்க வேண்டும்.



# நாம் ஏன் நமஸ்கரிக்கின்றோம்?



நாம் மனிதர், வேறு பல பிராணிகளும் இருக்கின்றன. அவையெல்லாம் குறுக்காக வளர்ந்திருக்கின்றன. மனிதர்கள் மாத்திரம் மேல்நோக்கி வளர்ந்திருக்கிறார்கள். மனிதன் மேல்நோக்கவேண்டுமென்பதே ஈசுவரன் உத்தேசம். மனிதருக்குக் கீழே புழு வரையில் பல சிருஷ்டிகள் இருக்கின்றன. ஊரும் பிராணிகள், பறக்கும் பிராணிகள், நடக்கும் பிராணிகள் ஆகிய எல்லாம் குறுக்காகவே வளர்ந்திருக்கின்றன. இப்படி மனிதனுக்குக் கீழ் பல ஜீவ வர்க்கங்கள் இருப்பதுபோல், மனிதனுக்குமேலும் பல ஜீவ வர்க்கங்கள் இருப்பதாக நமது சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. மனிதனிலிருந்து கீழே போகப்போக ஞானம் குறையும். மனிதனிலிருந்து படிப்படியாக மேலேயுள்ள ஜாதிகளில் மனிதனைப் புழுவுக்குச் சமமாகப் பாவிக்க வேண்டும். படிப்படியாக அந்த ஜாதிகளின் ஞானம் பெருகி, நிறைந்த ஞானம் நான்முகனிடம் இருக்கிறது. நாம் மிகவும் போற்றும் நமது உடம்பின் உறுப்புகள் அருவருக்கத் தக்கவைகளாக இருக்கின்றன. இரத்தம், மாம்ஸம், எலும்பு, தோல் முதலியனவெல்லாம் அப்படியே. ஆனால் அவையெல்லாம் சேர்ந்து உண்டா

---

1933ஆ ஜனவரிமீ 31உ புதன்கிழமையன்று ஸ்ரீமல்லிகேசுவரர் ஆலயத்தில் ஸ்ரீ ஸ்வாமிகள் செய்த உபந்யாஸம்.

யிருக்கிற உடம்பு அறிவுக்கு இடமாகவிருக்கிறது. ஆகையால் அவைகளுக்கு தோஷமேற்படின் வைத்தியம் செய்து சம்ரட்சிக்கவேண்டியிருக்கிறது. மகா விகாரமான மாம்ஸாதிகளைக்கூட்டிச் செய்திருக்கிற தேகத்திலேயே அறிவிருப்பதால் ஸ்தூலமாயிராத சரீரத்தையுடைய ஜாதிகள் நம்மைவிட அதிக அறிவுள்ளவர்களாக இருக்கமுடியும், நம்முடைய அறிவைப் புழு அறியமாட்டாது. அப்படியே நமக்கு மேலுள்ள ஜாதிகளின் அறிவை நாம் அறியவில்லை. கின்னரர், கிம்புருஷர், உரகர், நாகர், யட்சர், சித்தர், கர்மதேவதைகள், தேவதைகள் என்று பல ஜாதிகள் இருக்கின்றன. நமது உடம்பைப்போல் ஆபாஸமல்லாத உடம்பு அவர்களுக்கிருக்கிறது. ஒரு புஷ்பம் அழுகிவிடின், அது நாறும். அழுகாதபோது சுகந்தந்தரும். மண்ணில் நல்ல குணமுமிருக்கிறது, கெட்டதுமிருக்கிறது. அதிலிருந்துண்டாவதிலும் இரண்டுமிருக்கின்றன. நம்முடைய தேகம் பிரக்ருதியை ஆதாரமாக வுடையதால் அதில் நல்லதும் கெட்டதும் இருக்கின்றன. தேவ சரீரங்களை வைஷ்ணவர்கள் அப்ராக்ருத சரீரமென்பர். அதாவது பிரகிருதி (மண்) சம்பந்தமில்லாதது. நாம் தேவ சரீரங்களைத் திவ்ய சரீரமென்கிறோம். அப்ராக்ருத அல்லது திவ்ய சரீரத்தையுடைய தேவகணங்களில் அறிவு தீட்சண்யமாக இருக்கிறது. அவர்களில் பிரமத கணங்கள் என்று ஒரு வகையுண்டு. அவர்கள் கைலாசத்தில் பார்வதி பரமேசுவரன் சன்னதியில் கைங்கரியம் செய்கிறவர்கள். அவர்களில் ஒருவருக்கு ஒரு சமயத்தில் பக்தி குறைந்துவிட்டது. ஆகையால் பிரமத கணத்தி

விருக்கத் தகுதியை இழந்துவிட்டார். எனவே வேறு சில ஜன்மங்களை எடுக்க நேர்ந்தது. அவர் ஒரு கந்தர்வனாகப் பிறந்தார். கந்தர்வ ஜன்மத்தில் அவருக்குப் புஷ்பதந்தன் என்று பெயர். அவர் ஈசுவரனை ஸ்தோத்திரம் செய்திருக்கிறார். மீன் குஞ்சுக்கு நீந்தக் கற்றுக்கொடுக்கவேண்டுமா! அப்படியே கந்தர்வர்கள் பிறப்பினாலேயே பாடுவர், சித்திர மெழுதுவர், ஆகாயத்தில் சஞ்சரிப்பர். இப்படிப்பட்ட ஜன்மம் நமக்கு உயர்ந்ததேயாயினும் பிரமத கணங்களுக்கு மிகக் கீழானது.

वपुःप्रादुर्भावादनुमितमिदं जन्मनि पुरा
पुरारे नकापि क्वचिदपि भवन्तं प्रणतवान् ।
नमन् मुक्तः संप्रत्यहमतनुरग्रेप्यनतिमान्
इतीश क्षन्तव्यं तदिदमपराधद्वयमपि ॥

என்று அவர் சொல்லியிருக்கிறார்:—

இதன் கருத்தைச் சொல்லுகிறேன். இரண்டு அபராதங்களை க்ஷமிக்க வேண்டுமென்று அவர் ஈசுவரனை வேண்டிக்கொள்கிறார், அவர் சொல்லுகிறார்:—நான் தேகத்தை அடைந்திருப்பதால் ஒரு தீர்மானம்செய்கிறேன். அதாவது உங்களை எந்த இடத்திலும் எந்த சமயத்திலும் ஒரு முறைகூட நமஸ்கரித்ததில்லை. ஹே, திருபுர ஸம்ஹாரம் செய்த பிரபோ, உங்களை நான் நமஸ்கரிக்கவில்லை. அதை நான் எப்படித் தெரிந்து கொண்டேன் என்றால் இந்த தேகமே அதற்கு சாட்சி. இதை நான் தெரிந்துகொண்டு விட்டேனாகையால் இப்

பொழுது இதோ நமஸ்கரித்து விட்டேன். இனிமேல் உடம்பு வாராது. ஆகையால் இனிமேல் உங்களை நமஸ் காரம் பண்ண மாட்டேன். ஏற்கனவே உங்களை நமஸ் கரிக்காதது ஒரு அபராதம். இப்பொழுது நமஸ்கரித்து விட்டதால் இனிமேல் நமஸ்கரிக்க முடியாமற் செய்து கொண்டு விட்டது ஒரு அபராதம். இவ்விரண்டு அபரா தங்களையும் தாங்கள் க்ஷமிக்க வேண்டுமென்று அவர் பிரார்த்தித்தார். ஆகையால் மனப்பூர்வமாக ஈசுவரனை நமஸ்காரம் செய்து விடின் இனி ஜன்மமில்லை என்பது நிச்சயம். பாபங்கள் எல்லாம் போய் முக்தி வந்துவிடும். அவர் அனுபவசாலி, அவருடைய வார்த்தையை நம்பி நாமும் சரணாகதிசெய்வோம்.

மோட்சமடைய வழி இவ்வளவு சுலபமாகச் சொல்லப்பட்டிருக்கையில் இதர மதஸ்தர்கள் நம் மதத்தில்மோட்சத்திற்கு மார்க்கமில்லை என்று சொல்லி நம்மை அவர்களுடைய மதத்திற்குக் கூப்பிடுகிறார்கள். நாம் கிறிஸ்தவராகிவிடின் போதுமென்கிறார்கள். மோட்சத்திற்காக அம்மதத்தில் சேரவேண்டியதில்லை. ஈசுவரனுக்கு நமஸ்காரம் செய்வதே போதும். ஈசுவரனை நமஸ்கரித்தால் மோட்சம் கிடைக்குமா? கிடைக்குமென்று திடமாக நம்பி நமஸ்கரித்தால் நிச்சயம் கிடைக்கும்.

இனி நமஸ்காரம் எப்படிச் செய்ய வேண்டுமென் பதைச் சொல்லுகிறேன். நமஸ்காரம் செய்வதை தண்டம் சமர்ப்பித்தல் என்கிறோம். தமிழில் ஸ்வாமீ தண்டம் என்கிறார்கள். தெலுங்கில் தண்டம் பெட்டு என்று சொல்லுகிறார்கள். தண்டம் என்பது ஒருகழி

அல்லது கோல். கையில்பிடித்துள்ள ஒரு கோலை விட்டு விட்டால் அது கீழே விழுந்து விடும். நமஸ்காரம் செய்வதைத் தண்டம் போல் செய்ய வேண்டுமென்று சமஸ்கிருதத்தில் சொல்வது வழக்கம். நமது உடம்பு ஒரு கோல் போல் இருக்கிறது. அப்படிப் பட்ட தேகத்தை நாம் தரித்துக் கொண்டிருக்கிறோம். அதை நாம் தரிக்க நமக்குச் சக்தி கொடுத்தது ஈசுவரன். ஜ்வரம் வந்து விடின் கீழே விழுந்துவிடுகிறோம். புண்ய பாபத்தை அனுசரித்து உடம்பைத்தரிக்கச் சக்தி ஏற்பட்டிருக்கிறது. நாம் அதைத் தரிக்கிறோமென்ற எண்ணத்தை விட்டுவிட்டதற் கடையாளமாகக் கீழே விழவேண்டும். அதாவது அகம்பாவத்தை விட்டுக் கீழே விழவேண்டும். லோக காரியங்களைச் செய்ய அகம்பாவம் (நான் என்ற பாவம்) வேண்டும். மற்ற நேரத்தில் கூடாது. நாம் செய்கிறோம் என்ற எண்ணத்தை விட்டு விட்டு நமஸ்கரிக்க வேண்டும். சந்நிதானத்தில்கோல்போல் விழுந்து விட்டால் மற்ற இடங்களில் நிமிர்ந்து ஓங்கலாம். அங்கு வணங்கினால் வெளியே வணங்காமுடி மன்னனாக இருக்கலாம். நம்முடையதல்லவென்று பொறுப்பை அவருடையதாக விட்டுவிடவேண்டும். பொறுப்பு நம்முடையதென்று வைத்துக்கொண்டு விட்டால் அவருடைய பொறுப்பை அவர் குறைத்துக் கொண்டுவிடுவார். நம்முடைய விரோதிகளைச் சிட்சிப்பதைக்கூட அவரிடம் விட்டுவிடவேண்டும். அவரை நாம் ஏதேனும் கேட்க ஆரம்பித்தால் அதைக் கொடுத்து விட்டு இருந்துவிடுவர். நமக்கு இன்னது வேண்டும் வேண்டா மென்பது நமக்குத் தெரியாது. என்ன

வேண்டுமென்று கேட்டால் தெரியாது என்று சொல்லி விடவேண்டும். அப்பொழுது நமக்கு என்ன வேண்டு மென்று கேட்கவேண்டிய அவசியமிராத நிலைமையை அவர் கொடுத்து விடுவார்; ஆகையால் நாம் என்ற எண் ணத்தைவிட்டு அவரை நமஸ்கரிப்போம்.

---

# प्रश्नोत्तर-रत्नमालिका ।

कः खलु नालंक्रियते दृष्टादृष्टार्थसाधनपटीयान् ।
अमुया कण्ठस्थितया प्रश्नोत्तररत्नमालिकया ॥ १ ॥

இஹபரசிரேயஸ்ஸையடைய சாமர்த்தியமுள்ள யார்தான் இந்த பிரச்னேத்தர ரத்ன மாலிகையை மனதில் வாங்கி இதனுல் அலங்கரிக்கப்படவில்லை.

भगवन्किमुपादेयं गुरुवचनं, हेयमपि च किमकार्यम् ।
को गुरुरधिगततत्त्वः शिष्यहितायोद्यतः सततम् ॥ २ ॥

கே:—ஸ்வாமி, கிரஹித்துக்கொள்ளவேண்டியது என்ன?

ப:—குரு வசனம்.

கே:—தள்ளவேண்டியது என்ன?

ப:—அகார்யம்.

கே:—குரு யார்?

ப:—உண்மையை அறிந்தவர். தன்னை அண்டின சிஷ்யர்களின் க்ஷேமத்தைக் கருதினவர்.

त्वरितं किं कर्तव्यं विदुषां संसारसंततिच्छेदः ।
किं मोक्षतरोर्बीजं सम्यक्ज्ञानं क्रियासिद्धम् ॥ ३ ॥

கே:—துரிதமாக செய்யவேண்டியது என்ன?

ப:—சம்சார பரம்பரையைக் கத்தரி. (செத்துச் செத்துப் பிறக்காமல் மோட்சமடை.)

---

கே=கேள்வி.

ப=பதில்.

கே :—மோட்ச மார்க்கத்துக்கு விதை எது ?

ப :—உள்ளதை உள்ளபடி அறிந்து காரியத்தில் காட்டுவது.

कः पथ्यतरो धर्मः कः शुचिरिह यस्य मानसं शुद्धम् ।
कः पण्डितो विवेकी किं विषमवधीरणा गुरुषु ॥ ४ ॥

கே:—எது பத்தியம் ? (ஹிதமானது.)

ப :—தர்மம்.

கே :—எவன் சுத்தன்.

ப :—எவன்மனது சுத்தமாக இருக்கிறதோ அவன்.

கே :—எவன் பண்டிதன் ?

ப :—விவேகி. (விவேகத்தையுடையவன்)

கே :—எது விஷம் ?

ப :—பெரியார் வார்த்தையை அலட்சியம் செய்வது.

किं संसारे सारं बहुशोऽपि विचिन्त्यमानमिदमेव ।
किं मनुजेष्विष्टतमं स्वपरहितायोद्यतं जन्म ॥ ५ ॥

கே :—ஸம்ஸாரத்தில் ஸாரமெது ?

ப :—அடிக்கடி இதை நினைத்துக்கொண்டிருப்பதே. (ஸம்ஸாரத்தில் ஸாரமேது என்று நினைத்துக்கொண்டே இருப்பதால் பற்றுவிட்டுப் பிறப்பறுக்கலாம்.)

கே :—மனிதர்கள் வேண்டவேண்டியது எது ?

ப :—தான், பிறர் இரண்டுபேரின் க்ஷேமத்திற்காக ஈடுபடும் ஜன்மம்.

मदिरेव मोहजनकः कः स्नेहः के च दस्यवो विषयाः ।
का भववल्ली तृष्णा को वैरी यस्त्वनुद्योगः ॥ ६ ॥

கே :—கள்போல் மயக்கத்தை உண்டுபண்ணுவது எது ?

ப :—பற்றுதல். (ஆசை, ஸ்நேகம்.)

கே :—திருடர்கள் யார் ?

ப :—இந்திரியங்களை இழுத்துக்கொண்டு போகும் விஷயங்கள் தான்.

கே :—சம்சாரக் கொடி எது ?

ப :—ஆசைதான்.

கே :—சத்துரு யார் ?

ப :—சோம்பேறித்தனமே.

कस्माद्भयमिह मरणादन्धादिह को विशिष्यते रागी ।
कः शूरो यो ललनालोचनबाणैर्न च व्यथितः ॥ ७ ॥

கே :—எல்லோரும் பயப்படுவது எது ?

ப :—மரணம்.

கே :—குருடனைக்காட்டிலும் குருடன் யார் ?

ப :—ஆசையுள்ளவன்.

கே :—சூரன் யார் ?

ப :—துன்மார்க்கத்தில் மனம்போகாமல் அடக்குகிறவன்.

पातुं कर्णाञ्जलिभिः किममृतमिह युज्यते सदुपदेशः ।
किं गुरुताया मूलं यदेतदप्रार्थनं नाम ॥ ८ ॥

கே :—காதாகிய அஞ்சலியால் சாப்பிடக்கூடிய அமிருதம் எது ?

ப :—சாதுக்களுடைய உபதேசம். (இரண்டு கைகளையும் சேர்த்துக் குவித்துக்கொள்வது அஞ்சலி. காது குவிந்திருப்பதால் அஞ்சலி என்று சொல்லப்பட்டிருக்கிறது.)

கே :—மதிப்புக்கு மூலம் எது ?

ப :—ஒருவனை எதையும் கேட்காதிருத்தல்.

किं गहनं स्त्रीचरितं कश्चतुरो यो न खण्डितस्तेन ।
किं दुःखमसंतोषः किं लाघवमधमतो याच्ञा ॥ ९ ॥

கே:—அளவிட முடியாதது எது ?

ப:—பெண்களின் நடை.

கே:—சமர்த்தன் யாவன் ?

ப:—பெண்களின் நடையினால் வஞ்சிக்கப்படாதவன்.

கே:—வறுமை யாது ?

ப: – திருப்தியின்மை.

கே: —கீழ்மை யாது ?

ப:—கீழ்ப்பட்டவனிடத்தில் யாசிப்பது.

किं जीवितमनवद्यं कि जाड्यं पाठतोऽप्यनभ्यासः ।
को जागर्ति विवेकी का निद्रा मूढता जन्तोः ॥ १० ॥

கே:—உயர்ந்த ஜீவனம் யாது ?

ப:—குற்றமின்மை.

கே:—அறிவின்மை யாது?

ப:—தேர்ச்சியிலும் அப்பியாஸமின்றியிருத்தல்.

கே:—ஜாக்ரமுடையோன் எவன்?

ப:—விவேகமுள்ளவன்.

கே:—உறக்கம் யாது?

ப:—ஜீவர்களது மூடத்தன்மை.

नलिनीदलगतजलवत्तरलं किं यौवनं धनं चायुः ।
कथय पुनः के शशिनः किरणसमाः सज्जना एव ॥ ११ ॥

கே:—தாமரையிலைத் தண்ணீர்போல் நிலையில்லாதன எவை?

ப:—இளமை செல்வம், ஆயுள் என்பன.

கே:—சந்திரகிரணம்போல் பிறருக்கு ஹிதஞ்செய்பவர் யாவர்?

ப:—நல்லோரே.

को नरकः परवशता किं सौख्यं सर्वसङ्गविरतिर्या ।
किं साध्यं भूतहितं प्रियं च किं प्राणिनामसवः ॥ १२ ॥

கே:—நரகம் யாது?

ப:—பிறர் வசமாயிருத்தல்.

கே:—ஸௌக்யம் யாது?

ப:—ஸர்வஸங்க பரித்யாகம்.

கே:—சாதிக்கத்தக்கது யாது?

ப:—ஜீவர்களுக்கு ஹிதம்செய்தல்.

கே:—பிராணிகளுக்கு பிரியமுள்ளது யாது ?

ப:—பிராணன்.

कोऽनर्थफलो मानः का सुखदा साधुजनमैत्री ।
सर्वव्यसनविनाशे को दक्षः सर्वथा त्यागी ॥ १३ ॥

கே:—எது அனர்த்தத்தைத் தரும்?

ப:—அகம்பாவம்.

கே:—எது சுகத்தைத்தரும் ?

ப:—சத்சங்கம் அதாவது நல்ல மனதுள்ளவர்களின் சினேகம்.

கே:—துக்கத்தைத் துலைப்பதில் எவன் கெட்டிக்காரன்?

ப:—ஒன்றும் வேண்டாமென்று விட்டுக் கொடுப்பவன்.

किं मरणं मूर्खत्वम् किं चानर्घं यदवसरे दत्तम् ।
आमरणात्किं शल्यं प्रच्छन्नं यत्कृतं पापम् ॥ १४ ॥

கே:—மரணத்திலும் எது பெரியது?

ப:—அசட்டுத்தனம்.

கே:—விலை மதிக்கப்படாதது எது?

ப:—சமயத்தில் கொடுத்தது.

கே:—சாகும்வரையில் குத்துவது எது?

ப:—இரகஸ்யத்தில் செய்தபாபம்.

कुत्र विधेयो यत्नो विद्याभ्यासे सदौषधे दाने ।
अवधीरणा क्व कार्या खलपरयोषित्परधनेषु ॥ १५ ॥

கே :—எதற்காகப் பிரயத்தனம் செய்ய வேண்டும்?

ப :—வித்தியாப்பியாசம், தானம் செய்தல், தேகா ரோக்கியம், இவைகளுக்காக.

கே :—அலக்ஷயம் செய்யவேண்டியது எது?

ப :—கெட்டவர்கள், பிறருடைய தாரம், பிறருடைய பொருள் என்பவை.

काहर्निशमनुचिन्त्या संसारासारता न तु प्रमदा ।
का प्रेयसी विधेया करुणा दीनेषु सज्जने मैत्री ॥ १६ ॥

கே :—இராப்பகல் நினைக்கவேண்டியது எது?

ப :—சம்சாரத்தில் சாரம் இல்லை என்பது.

கே :—பிரியம் வைக்கவேண்டியது எது?

ப :—தீனுளிடத்தில் கருணையும் ஸாதுக்களிடத்தில் சிநேகமும்.

कण्ठगतैरप्यसुभिः कस्य ह्यात्मा न शक्यते जेतुम् ।
मूर्खस्य शङ्कितस्य च विषादिनो वा कृतघ्नस्य ॥ १७ ॥

கே :—எவன் ஆத்மாவை நல்வழிப்படுத்த முடியாது?

ப :—போக்கிரிகள், நித்ய சந்தேகி, அழுமூஞ்சி, நன்றியில்லாதவன்.

कः साधुः सद्वृत्तः कमधममाचक्षते त्वसद्वृत्तम् ।
केन जितं जगदेतत्सत्यतितिक्षावता पुंसा ॥ १८ ॥

கே :—சாது யார்?

ப :—நல்ல நடத்தையுடையவன்.

கே :—எவன் அதமன்.

ப :—கெட்ட நடத்தையுடையவன்.

கே :—ஜகத்தை யார் ஜயிக்கலாம்.

ப :—ஸத்தியமும் பொறுமையுமிருந்தால் இந்த ஜகத்தை ஜயித்துவிடலாம்.

कस्मै नमांसि देवाः कुर्वन्ति दयाप्रधानाय ।
कस्मादुद्वेगः स्यात्संसारारण्यतः सुधियः ॥ १९ ॥

கே :—எவனைத் தேவர்களும் கும்பிடுகிறார்கள்.

ப :—தயை உடையவனை.

கே :—எதைக்கண்டு நடுங்க வேண்டியது.

ப :—ஸம்ஸாரமாகிய காட்டைகண்டு பயப்பட வேண்டும்.

कस्य वशे प्राणिगणः सत्यप्रियभाषिणो विनीतस्य ।
क स्थातव्यं न्याय्ये पथि दृष्टादृष्टलाभाढ्ये ॥ २० ॥

கே :—ஜீவராசிகள் எவனுக்கு வசமாம்?

ப :—ஸத்யமும் பிரியமுமான வசனமுடைய வணக்கமுள்ளவனுக்கு.

கே :—காணப்படுவனவும் காணப்படாதனவுமாகிய பொருள்களை பெருதற்பொருட்டு நிற்கவேண்டியது எங்கே?

ப :—நியாயவழியில்.

कोऽन्धो योऽकार्यरतः को बधिरो यो हितानि न शृणोति ।
को मूको यः काले प्रियाणि वक्तुं न जानाति ॥ २१ ॥

கே:—குருடன் யார்?

ப:—படித்திருந்தும் கெட்டகாரியஞ் செய்பவன்.

கே:—செவிடன் யார்?

ப:—ஹிதத்தைக் கேட்காதவன்.

கே:—ஊமையார்?

ப:—உசிதமான வார்த்தைகளைச் சரியான காலத்தில் சொல்ல முடியாதவன்.

किं दानमनाकाङ्क्षं किं मित्रं यो निवारयति पापात् ।
कोऽलंकारः शीलं किं वाचां मण्डनं सत्यम् ॥ २२ ॥

கே:—தானம் என்பது எது?

ப:—கேட்காது கொடுத்தல்.

கே:—சிநேகிதன் யார்?

ப:—பாவஞ் செய்யாது தடுப்பவன்.

கே:—அழகு எது.

ப:—சீலம்.

கே:—வாக்கிற்கு அழகு எது?

ப:—ஸத்யம்

विद्युद्विलसितचपलं किं दुर्जनसंगतिर्युवतयश्च ।
कुलशीलनिष्प्रकम्पाः के कलिकालेऽपि सज्जना एव ॥ २३ ॥

கே:—மின்னலொளிபோல் சஞ்சலமானவை யாவை?

ப:—துர்ஜனர் ஸங்கமும் ஸ்திரீகளும்.

கே :—கலிகாலத்திலும் குலசீலத்தினின்றும் சலிக்காதவர் யாவர் ?

ப :—சத்புருஷர்கள்.

चिन्तामणिरिव दुर्लभमिह किं कथयामि तच्चतुर्भद्रम् ।
किं तद्वदन्ति भूयो विधूततमसो विशेषेण ॥ २४ ॥
दानं प्रियवाक्सहितं ज्ञानमगर्वं क्षमान्वितं शौर्यम् ।
वित्तं त्यागसमेतं दुर्लभमेतच्चतुर्भद्रम् ॥ २५ ॥

கே :—சிந்தாமணிபோல் துர்லபமானது எது (கிடைத்தற்கரியது)

ப :—சதுர்பத்ரம் (பத்ரமாக இருப்பது பத்ரம் சுபம்)

சதுர்பத்ரமாவன :-பிரிய வாக்குடன் தானம், கர்வமில்லாமல் ஞானம், க்ஷமையுடன் கூடிய சௌரியம், தியாகத்துடன்கூடிய செல்வம்.

किं शोच्यं कार्पण्यं सतिविभवे किं प्रशस्तमौदार्यम् ।
कः पूज्यः विद्वद्भिः स्वभावतः सर्वदा विनीतो यः ॥

கே :—பரிதாபப்படத் தக்கது எது.

கே :—கார்ப்பண்ணியம். (கருமித்தனம். தனக்குமில்லாமல் பிறருக்குமில்லாமல், இகத்துக்குமில்லாமல் பரத்துக்குமில்லாமல் நிரம்பவைத்துக் கொண்டிருத்தல்)

கே :—சௌகரியங்களிருப்பின் எது பிரஸ்தம் ? (புகழப்படுவது)

ப :—ஔதார்யம்.

கே :—அறிவுடையோர் யாரை பூஜிப்பர்?

ப :—இயல்பாகவே எப்பொழுதும் வணக்கமுள்ளோரை.

(காரியத்தை உத்தேசித்து விநயத்துடன் இருப்பது சுவபாவ விநயமாகாது.)

காரியத்தை உத்தேசித்து விநயத்துடன் இருப்பவன் ஏற்றமரத்துக்கு சமானமென்று ஒரு சுலோகமிருக்கிறது.

சால் நிரம்பினவுடன் ஏற்ற மரத்தின் தலை ஆகாயத்திலிருக்கும், சால் வடிந்ததும் தலை குனிந்துவிடும்.

அப்படியே காரியத்தை உத்தேசித்து விநயத்துடன் இருப்பவன் ஜீவனங்கிடைக்காத போது தலையைத் தொங்கப்போடுவன், ஜீவனம் கிடைத்துவிடின் தலை விறைத்துக்கொள்ளும்.

कः कुलकमलदिनेशः सति गुणविभवेऽपि यो नम्रः ।
कस्य वशे जगदेतत्प्रियहितवचनस्य धर्मनिरतस्य ॥ २७ ॥

கே :—நாம் பிறந்துள்ள குலமாகிய தாமரை எந்த சூரியனைக்கண்டால் ஆனந்தத்துடன் பிரகாசிக்கும்?

ப :—குணங்கள் பரிபூரணமாக விருந்தும், பரிபூரணமான விநயத்துடன் இருப்பவனைக் கண்டால் குலமாகிய தாமரை பிரகாசிக்கும்.

கே :—இந்தப் பிரபஞ்சம் யாருக்குவசப்படும்?

ப:—பிரியமாகப் பேசக் கற்றுக்கொண்டு தர்மத்தை அனுஷ்டிப்பவனுக்குப் பிரபஞ்சம் வசப்பட்டுவிடும்.

(ஜகத்தை வசியப்படுத்துகிறதற்காக விநயத்தைக் கைக்கொள்ளக்கூடாது. விநயத்துடன் இருந்தால், ஜகத்து தானுக வசப்பட்டுவிடும்)

विद्वन्मनोहरा का सत्कविता बोधवनिता च ।
कं न स्पृशति विपत्तिः प्रवृद्धवचनानुवर्तिनं दान्तम् ॥ २८ ॥

கே:—வித்வான்களின் மனதைக்கவர்வது யாது?

ப:—நல்ல கவிதையும் புத்தியுள்ள ஸ்திரீயும்.

கே:—விபத்து எவனைத்தீண்டாது?

ப:—பெரியோர் வார்த்தையை யனுசரித்து நடப்பவனையும் அடக்கமுள்ளவனையும்.

कस्मै स्पृहयति कमला त्वनलसचित्ताय नीतिवृत्ताय ।
त्यजति च कं सहसा द्विजगुरुसुरनिन्दाकारं च सालस्यम् ॥

கே:—லக்ஷ்மி யாரை விரும்புவாள்?

ப:—சுத்த சித்தமுடைய, நீதி தவருத நடையுடைவனை.

கே:—எவனை விரைவில் விட்டு விலகுவாள்?

ப:—பிராம்மணனையும், குருவையும், தேவர்களையும், நிந்திக்கும் சோம்பேரித்தனமுடையவனை.

कुत्र विधेयो वासः सज्जननिकटेऽथवा काश्याम् ।
कः परिहार्यो देशः पिशुनयुतो लुब्धभूपश्च ॥ ३० ॥

கே :—வாசஞ் செய்யவேண்டியது எங்கே?

ப :—நல்லவர்களுடைய ஸமீபத்தில் அல்லது காசி க்ஷேத்திரத்தில்.

கே :—விட்டு விலக வேண்டிய தேசம் யாது?

ப :—கீழ் மக்களுள்ளதும், லோபியாயுள்ள அரசனுயுடைய தேசம்.

केनाशोच्यः पुरुषः प्रणतकलत्रेण धीरविभवेन ।
इह भुवने कः शोच्यः सत्यपि विभवे न यो दाता ॥ ३१ ॥

கே :—எதினுல் மனிதன் துக்கமில்லாதவனுயிருப்பான்?

ப :—வணக்கமுள்ள பெண்சாதியாலும் நிலையுள்ள ஐச்வர்யத்தாலும்.

கே :—இவ்வுலகில் விசனக்கப் படத்தகுந்தவன் எவன்?

ப :—பொருளிருந்தும் கொடாதவன்.

किं लघुताया मूलं प्राकृतपुरुषेषु या याच्ञा ।
रामादपि कः शूरः स्मरशरनिहतो न यश्चलति ॥ ३२ ॥

கே :—இகழ்ச்சிக்குக் காரணம் எது?

ப :—தாழ்ந்தவர்களிடம் யாசிப்பது.

கே :—ஸ்ரீ ராமனைவிட சூரன் யார்?

ப :—மன்மத பாணங்களால் அடிப்படும் தன்னிலையிலிருப்பவன்.

किमहर्निशमनुचिन्त्यं भगवच्चरणं न संसारः ।
चक्षुष्मन्तोऽप्यन्धाः के स्युर्ये नास्तिका मनुजाः ॥ ३३ ॥

கே :—இரவும் பகலும் சிந்திக்கத்தக்கது எது?

ப :—ஈச்வரனது பாதாரவிந்தங்களே - ஸம்ஸாரமல்ல.

கே :—கண்ணிருந்தும் குருடன் யார்?

ப :—நாஸ்திகர்களான மனிதர்கள்.

कः पङ्गुरिह प्रथितो व्रजति च यो वार्धके तीर्थम् ।
किं तीर्थमपि च मुख्यं चित्तमलं यन्निवर्तयति ॥ ३४ ॥

கே :—முடவன் யார்?

ப :—முதிர்ந்த வயதில் தீர்த்த யாத்திரை போகிறவன்.

கே :—முக்யமான தீர்த்தம் எது?

ப :—சித்தத்திலிருக்கும் அழுக்கை எது நீக்குகிறதோ அதுதான்.

किं स्मर्तव्यं पुरुषैर्हरिनाम सदा न यावनी भाषा ।
को हि न वाच्यः सुधिया परदोषश्चानृतं तद्वत् ॥ ३५ ॥

கே :—மனிதர்களால் ஸ்மரிக்கத்தக்கது எது?

ப :—எப்பொழுதும் ஹரி நாமமே-ம்லேச்ச பாஷையல்ல.

கே :—நல்ல புத்திடையவனால் சொல்லத்தகாதது எது?

ப :—பிறரது குற்றமும், அஸத்யமும்.

किं संपाद्यं मनुजैर्विद्या वित्तं बलं यशः पुण्यम् ।
कः सर्वगुणविनाशी लोभः शत्रुश्च कः कामः ॥ ३६ ॥

கே :—மனிதர்களால் சம்பாதிக்கத்தக்கது எது ?

ப :—கல்வி, செல்வம், வலிமை, புகழ், புண்யம், இவைகள்.

கே :—சகல குணங்களையும் அழிப்பது எது ?

ப :—லோபம்-கருமித்தனம்.

கே :—பகைவன் எவன் ?

ப :—காமம்.

का च सभा परिहार्या हीना या वृद्धसचिवेन ।
इह कुत्रावहितः स्यान्मनुजः किल राजसेवायाम् ॥ ३७ ॥

கே :—எந்த ஸபையை விலக்க வேண்டும் ?

ப :—வயது முதிர்ந்த மந்திரிகளில்லாத ஸபையை.

கே :—இவ்வுலகில் மனிதன் எவ்விஷயத்தில் ஜாக்கிரதையுடனிருக்க வேண்டும்?

ப :—ராஜ ஸேவை செய்வதில்.

प्राणादपि को रम्यः कुलधर्मः साधुसङ्गश्च ।
का संरक्ष्या कीर्तिः पतिव्रता नैजबुद्धिश्च ॥ ३८ ॥

கே :—பிராணனைவிட பிரியமானது எது ?

ப :—குலதர்மமும் சாதுக்களின் சேர்க்கையும்.

கே :—இரட்சிக்கத்தக்கது யாது ?

ப :—கீர்த்தியும் ,கற்பும், சுயபுத்தியுமாம்.

का कल्पलता लोके सच्छिष्यायार्पिता विद्या ।
कोऽक्षयवटवृक्षः स्याद्विधिवत्सत्पात्रदत्तदानं यत् ॥ ३९ ॥

கே :—லோகத்தில் கற்பக்கொடியாவுள்ளது எது?

ப :—ஸத்சிஷ்யனுக்கு அர்ப்பணம் செய்யும் படிப்பு (படித்தவன் ஒவ்வொருவனும் முன்னுளில் தான் படித்த படிப்பைச் சிஷ்யர்களுக்குச் சொல்லிக் கொடுக்கவேண்டும். இந்நாளில் (L.T.) எல்.டி. கள் தான் அதைச் செய்கிறுர்கள். மற்றவர்கள் தாம் படித்த படிப்பைக் காலட்சேபத்திற்காக உபயோகப்படுத்துகி ருர்கள்.)

கே :—அட்சயவடம் போன்றது எது?

ப :—விதிப்படி ஸத்பாத்திரத்தில் கொடுக்கப்படும் தானம்.

किं शस्त्रं सर्वेषां युक्तिर्माता च का धेनुः ।
किं नु बलं यद्धैर्यं को मृत्युर्यदवधानरहितत्वम् ॥ ४० ॥

கே :—எந்த ஆயுதம் எல்லோருடைய கையிலுமுள் ளது?

ப:—யுக்தி. (நியாயபூர்வமாக நிரூபணம் செய்யக் கூடிய சக்தி.)

கே :—எல்லோருக்கும் தாயார் யார்?

ப :—பசு. (தன் குழந்தைக்குப் பால் கொடுத்து விட்டு ஊருக்கும் பால் கொடுக்கும் தாய் பசு. அதை நாம் ரட்சிக்கவேண்டும்.)

கே :—எது சேனை ?

ப :—தைரியம்.

கே :—எது எமன் ?

ப :—கவனமில்லாதிருந்துவிடல்.

कुत्र विषं दुष्टजने किमिहाशौचं भवेदृणं नृणाम् ।
किमभयमिह वैराग्यं भयमपि किं वित्तमेव सर्वेषाम् ॥ ४१ ॥

கே :—விஷம் எங்கிருககிறது ?

ப :—துஷ்ட ஜனங்களிடத்தில் இருக்கிறது.

கே :—முதல்தரமான தீட்டு எது ?

ப :—கடன்தான். (கடன்காரனுக்கு மனிதர் ஒளிவதுபோல் வேறு எதற்கும் ஒளிவதில்லை.) தீட்டில் கோவிலுக்குப் போகக்கூடாது, சபைக்குப் போகக் கூடாது. கடன்பட்டவனும் அப்படியே போகமாட்டான்.)

கே :—அபயம் எது? (பயப்பட்டவேண்டாத நிலைமை)

ப :—வைராக்கியம். (ஆசையை விட்டுவிடின், அதுவே அபயம்.)

கே :—எது பயம் ?

ப :—பணம் தான்.

का दुर्लभा नराणां हरिभक्तिः पातकं च किं हिंसा ।
को हि भगवत्प्रियः स्याद्योऽन्यं नोद्वेजयेदनुद्विग्नः ॥ ४२ ॥

கே:—நரர்களுக்குத் துர்லபமானது எது? (கிடைத்தற்கரியது.)

ப:—ஹரிபக்தி.

கே:—எது பாதகம்?

ப:—ஹிம்ஸித்தல்.

கே:—பகவானுக்கு யாரிடத்தில் பரம பிரியம்?

ப:—தானும் மனதில் உபத்திரவப்படாமல் பிறருக்கும் உபத்திரவத்தை நினைக்காதவனிடத்தில்.

कस्मात्सिद्धिस्तपसो बुद्धिः क नु भूसुरे कुतो बुद्धिः ।
वृद्धोपसेवया के वृद्धा ये धर्मतत्त्वज्ञाः ॥ ४२ ॥

கே:—எதனால் காரியஸித்தி உண்டாகிறது?

ப:—தபஸினால் (ஏகாக்ரசித்தனாக ஒரு காரியத்தில் நினைவிருப்பது.)

கே:—தபஸ் எதனால் உண்டாகிறது?

ப:—புத்தியினால்.

கே:—புத்தி எங்கிருக்கிறது?

ப:—பிராம்மணனிடத்தில்.

கே:—நிஜமான புத்தி எது?

ப:—பெரியோரை அடுத்துச் சிசுருஷைசெய்து அடையும் புத்தி.

கே:—பெரியோர் யார்?

ப:—தர்ம தத்துவங்களை யறிந்தவர்கள் (அவர்கள் வயதில் சிறியோராகவிருப்பினும் பெரியோர்களே.)

संभावितस्य मरणादधिकं किं दुर्यशो भवति ।
लोके सुखी भवेत्को धनवान्धनमपि च किं यतश्चेष्टम् ॥ ४४ ॥

கே :—பேர் வாங்கியவனுக்கு மரணத்தைக்காட்டிலும் எது பெரிது?

ப :—அபகீர்த்தி.

கே :—எவன் சுகி?

ப :—தனவான்.

கே :—செல்வம் என்பது எது?

ப :—எதனுல் இஷ்டஸித்தி உண்டாகுமோ அதுவே செல்வம்.

सर्वसुखानां बीजं किं पुण्यं दुःखमपि कुतः पापात् ।
कस्यैश्वर्यं यः किल शंकरमाराधयेद्भक्त्या ॥ ४५ ॥

கே :—எல்லா சுகத்துக்கும் மூலம் எது?

ப :—புண்யம்.

கே :—துக்கத்திற்கு மூலம் எது?

ப :—பாபம்.

கே :—ஐசுவரியம் யாருக்குண்டாகும்?

ப :—ஈசுவரனைப் பக்தியுடன் ஆராதிப்பவனுக்கு.

को वर्धते विनीतः को वा हीयेत यो दृप्तः ।
को न प्रत्येतव्यो ब्रूते यश्चानृतं शश्वत् ॥ ४६ ॥

கே :—எவன் முன்னுக்கு வருவான்?

ப :—விநயமுவன்டைமேயேன்.

கே :—எவன் நஷ்டமடைவான் ?

ப:—கர்வமுள்ளவன் ?

கே:—எவனை நம்பக்கூடாது ?

ப :—எப்பொழுதும் பொய் சொல்பவனை.

कुत्रानृतेऽप्यपापं यच्चोक्तं धर्मरक्षार्थम् ।
को धर्मोऽभिमतो यः शिष्टानां निजकुलीनानाम् ॥ ४७ ॥

கே :—பொய் சொல்வது எப்பொழுது பாபமல்ல ?

ப :—தர்மத்தை ரட்சிக்கச் சொல்லப்பட்ட பொய் பாபமல்ல.

கே :—எது தர்மம் ?

ப :—நமது வம்சத்தில் பிறந்த பெரியோர்களில் ஸ்நானுனுஷ்டானமுள்ளவர்கள் அனுஷ்டித்த தர்மமே நமக்கும் தர்மம்.

साधुबलं किं दैवं कः साधुः सर्वदा तुष्टः ।
दैवं किं यत्सुकृतं कः सुकृती श्लाघ्यते च यः सद्भिः ॥ ४८ ॥

கே :—ஸாதுவுக்குப் பலம் யார் ?

ப :—தெய்வம்.

கே :—ஸாது யார் ?

ப :—எப்பொழுதும் சந்துஷ்டியுடனிருப்பவன்.. அழாதவன்.

கே :—தெய்வம் என்ன ?

ப :—நீ செய்த நல்ல காரியமே.

கே :—நல்வினை உடையவன் யார் ?

ப :—நல்லவர்களால் ஸ்லாகிக்கப்படுகிறவன்.

गृहमेधिनश्च मित्रं किं भार्या को गृही च यो यजते ।
कोयज्ञो यः श्रुत्या विहितः श्रेयस्करो नृणाम् ॥ ४९ ॥

கே :—க்ரஹஸ்தாசிரமத்தில் மித்திரன் யார் ?

ப :—மனைவி.

கே :—கிரஹஸ்தன் யார் ?

ப :—யக்ஞங்களைச் செய்கிறவன்.

கே :— யக்ஞமென்பது என்ன ?

ப :—செய்யப்படவேண்டியன வென்று வேதத்தால் எது விதிக்கப்பட்டு நமக்கு சிரேயஸ்ஸை தருகின்றதோ அதுதான்.

कस्य क्रिया हि सफला यः पुनराचारवाञ्शिष्टः ।
कः शिष्टो यो वेदप्रमाणवान्को हतः क्रियाभ्रष्टः ॥ ५० ॥

கே :—கர்மானுஷ்டானங்கள் எவனுக்குப் பலிக்கும் ?

ப :—ஆசாரமுள்ளவனாகவும் சிஷ்டனாகவும் இருப்பதுடன், வேதத்தில் பரம நம்பிக்கையுள்ளவனுக்குப் பலிக்கும்.

கே :—எவன் இருக்கையிலும் செத்தவன் ?

ப :—கர்மாக்களைச் செய்யாதவன்.

को धन्यः संन्यासी को मान्यः पण्डितः साधुः ।
कः सेव्यो यो दाता को दाता योऽर्थितृप्तिमातनुते ॥ ५१ ॥

கே:—எவன் தன்யன்?

ப:—ஸந்யாசி.

கே:—எவன் பூஜிக்கப்படுகிறவன்?

ப:—பண்டிதன். (படித்து சாதுவாக இருப்பவன்)

கே:—யாரை ஸேவிக்கவேண்டும்?

ப:—வள்ளலை.

கே:—வள்ளல் யார்?

ப:—யாசிப்பவனுக்குத் திருப்தி செய்துவைப்பவன்.

किं भाग्यं देहवतामारोग्यं कः फली कृषिकृत् ।
कस्य न पापं जपतः कः पूर्णो यः प्रजावान्स्यात् ॥ ५२ ॥

கே:—பெரிய பாக்யம் எது?

ப:—ஆரோக்கியம்.

கே:—பலன் எவனுக்குக் கிடைக்கும்?

ப:—பிரயத்னம் செய்கிறவனுக்கு.

கே:—பாபம் யாருக்கு வராது?

ப:—எப்பொழுதும் ஜபம் செய்கிறவனுக்கு.

கே:—நிறைந்தவன் யார்?

ப:—நல்ல பிள்ளைகளை உடையவன்.

किं दुष्करं नराणां यन्मनसो निग्रहः सततम् ।
को ब्रह्मचर्यवान्स्याद्यश्चास्खलितोर्ध्वरेतस्कः ॥ ५३ ॥

கே :—செய்யக் கஷ்டமானது எது?

ப :—மனதைத் தடுத்துக் கட்டிப்போடுவதே.

கே :—எவன் சரியான பிரம்மசாரி?

ப :—ஊர்த்துவ ரேதஸானவனுடையவன்.

का च परदेवतोक्ता चिच्छक्तिः को जगत्भर्ता ।
सूर्यः सर्वेषां को जीवनहेतुः स पर्जन्यः ॥ ५४ ॥

கே :—பரதேவதை யார்?

ப :—ஞானரூபியான அம்பிகை.

கே :—ஜகத்துக்குப் பர்த்தா யார்?

ப :—சூரியன் (அன்னம் போடுகிறவன்.)

கே :—ஜீவனுக்குக் காரணம் யார்?

ப :—மழை.

कः शूरो यो भीतत्राता त्राता च कः स गुरुः ।
को हि जगद्गुरुरुक्तः शंभुर्ज्ञानं कुतः शिवादेव ॥ ५५ ॥

கே :—சூரன் யார்?

ப :—பயப்பட்டவனை ரட்சிக்கிறவன்.

கே :—ரட்சிக்கிறவன் யார்?

ப :—ஸத்குரு.

கே :—ஜகத்குரு யார்?

ப :—சம்பு.

கே :—ஞானமெங்கிருந்து கிடைக்கும்?

ப :—அவரிடமிருந்தே.

मुक्तिं लभेत कस्मान्मुकुन्दभक्तेर्मुकुन्दः कः ।
यस्तारयेदविद्यां का चाविद्या यदात्मनोऽस्फूर्तिः ॥ ५६ ॥

கே :—மோட்சமெங்கிருந்துண்டாகும்?

ப :—முகுந்த பக்தியால்.

கே :—முகுந்தன் யார்?

ப :—அவித்தையைத் தாண்டவைப்பவர்.

கே :—அவித்தை என்ன?

ப :—ஆத்மாவை மறப்பது.

कस्य न शोको यः स्यादक्रोधः किं सुखं तुष्टिः ।
को राजा रञ्जनकृत् कश्च श्वा नीचसेवको यः स्यात् ॥ ५७ ॥

கே :—யாருக்குத் துக்கமில்லை?

ப :—கோபமற்றவனுக்கு.

கே :—சுகம் எது?

ப :—உள் சிரிப்பு (பல் சிரிப்பல்ல).

கே :—ராஜா யார்?

ப :—இவனைப்போலில்லை என்று சொல்லப் படுகிறவன்.

கே :—நாய் யார்?

ப :—நீச ஸ்வபாவமுள்ளவனிடத்தில் சேவிக்கும் துர்ப்பாக்கியமுள்ளவன்.

को मायी परमेशः क इन्द्रजालायते प्रपञ्चोऽयम् ।
कः स्वप्ननिभो जाग्रद्व्यवहारः सत्यमपि च किं ब्रह्म ॥ ५८ ॥

கே :—மாயையை அடக்கி ஆள்பவன் யார் ?

ப :—பரமேசுவரன்.

கே :—இந்திர ஜாலமெது ?

ப :—பிரபஞ்சமே.

கே :—சொப்பனம்போன்றதெது ?

ப :—ஜாக்கிராவஸ்தையிலுள்ள விவகாரம்.

கே :—ஸத்யம் எது ?

ப :—பரப்ருஹ்மம்.

किं मिथ्या यद्विद्यानाश्यं तुच्छं तु शशविषाणादि ।
का चानिर्वचनीया माया किं कल्पितं द्वैतम् ॥ ५९ ॥

கே :—அறிவினல் நாசமடைவது எது ?

ப :—மித்யை (பொய்).

கே :—எது துச்சம் ?

ப :—முயல் கொம்பு முதலியன.

கே :—நிஜம் பொய் என்று சொல்ல முடியாதது எது ?

ப :—மாயை.

கே :—அதனல் கற்பிக்கப்படுவது என்ன ?

ப :—த்வைதம்.

किं पारमार्थिकं स्यादद्वैतं चाज्ञता कुतोऽनादिः ।
वपुषश्च पोषकं किं प्रारब्धं चान्नदायि किं चायुः ॥ ६० ॥

கே :—எது பாரமார்த்திகம் ?

ப :—அத்வைதம்.

கே :—அக்ஞானம் எதனுல் உண்டாகிறது ?
ப:—அதற்கு ஆதியில்லை.
கே :—உடம்புக்குப் போஷணை கொடுப்பது எது ?
ப :—பிராரப்தம்.
கே :—அன்னத்தைக் கொடுப்பது யாது ?
ப:—ஆயுள்.

को ब्राह्मणैरुपास्यो गायत्र्यर्काग्निगोचरः शंभुः ।
गायत्र्यामादित्ये चाग्नौ शंभौ च किं नु तत्त्वम् ॥ ६१ ॥

கே :—பிராம்மணன் யாரை உபாஸிக்கவேண்டும் ?
ப :—காயத்ரி, சூரியமண்டலம், அக்னி இவைகளில் கோசரமாக வுள்ள சம்புவை.

प्रत्यक्षदेवता का माता पूज्यो गुरुश्च कस्तातः ।
कः सर्वदेवतात्मा विद्याकर्मान्वितो विप्रः ॥ ६२ ॥

கே :—பிரத்தியட்ச தேவதை யார் ?
ப :—தாயார்.
கே :—பூஜிக்கவேண்டிய குரு யார் ?
ப :—தகப்பனுர்.

கே :—ஸகல தேவஸ்ரூபி யார் ?
ப: —ஞான கர்மஸித்தியுடைய பிராம்மணன்.

कश्च कुलक्षयहेतुः संतापः सज्जनेषु योऽकारि ।
केषाममोघवचनं ये च पुनः सत्यमौनशमशीलाः ॥ ६३ ॥

கே :—குல நாசத்துக்குக் காரணம் எது ?

ப :—சாதுஜனங்களுடைய இருதயத்தில் தாபத்தை உண்டாக்கும் செய்கை.

கே :—யாருடைய சொல் பலிக்கும் ?

ப :—ஸத்தியவிரதம், மௌனவிரதம், க்ஷமை ஆகியவைகளையுடையவர்களின் சொல்.

किं जन्म विषयसङ्गः किमुत्तरं जन्म पुत्रः स्यात् ।
कोऽपरिहार्यो मृत्युः कुत्र पदं विन्यसेच्च दृक्पूते ॥ ६४ ॥

கே :—ஜன்மத்துக்குக் காரணம் யாது ?

ப :—விஷயத்தில் பற்று.

கே :—மேல் ஜன்மம் எது ?

ப :—புத்திரன்.

கே :—பரிகாரம் செய்ய முடியாதது எது ?

ப :—எமன்.

கே :—காலை எங்கே வைக்கவேண்டும் ?

ப :—கண்ணால் பரிசுத்தி செய்யப்பட்ட இடத்தில். (பிராணிகளுக்கு இம்சை செய்யும்படி காலை வைக்கக் கூடாது).

पात्रं किमन्नदाने क्षुधितं कोऽर्च्यो हि भगवदवतारः ।
कश्च भगवान् महेशः शङ्करनारायणात्मैकः ॥ ६५ ॥

கே :—அன்னதானத்திற்குப் பாத்திரன் யார் ?

ப :—பசியுள்ளவன்.

கே :—யாரை அர்ச்சிக்க வேண்டும் ?

ப :—பகவத் அவதாரத்தை.

கே :—பகவான் யார் ?
ப :—சங்கரனும் நாராயணனுமாகிய ஒரே மூர்த்தி.

फलमपि भगवद्भक्तेः किं तल्लोकस्वरूपसाक्षात्त्वम् ।
मोक्षश्च को ह्यविद्यास्तमयः कः सर्ववेदभूरथ चोम् ॥ ६६ ॥

கே :—பகவத்பக்திக்குப் பலமெது ?
ப :—அவனுடைய லோக சாட்சாத்காரம்.
கே :—மோட்சமெது ?
ப :—அவித்யையை அழித்தல்.
கே :—ஸகல வேதங்களுக்கும் உற்பத்தியும் லயமும் எது ?
ப :—ஓம்.

इत्येषा कण्ठस्था प्रश्नोत्तररत्नमालिका येषाम् ।
ते मुक्ताभरणा इव विमलाश्चाभान्ति सत्समाजेषु ॥ ६७ ॥

இந்தப் பிரச்னோத்தர ரத்நமாலையைக் கருத்தில் தரித்தவர்கள் முக்தாபரணங்கள் போல் நல்லோர் நிறைந்த சபைகளில் பிரகாசிப்பார்கள்.

பிரச்னோத்தர ரத்நமாலையில் 67 சுலோகங்கள் இருக்கின்றன. 65 தான் நமதாசாரியாள் செய்ததாக நான் நினைக்கிறேன். ஓம் என்று 66-வது சுலோகத்தில் சொல்லியிருப்பதுடன் அவர்கள் முடித்துவிட்டார்கள். முதல் சுலோகமும் கடைசி சுலோகமும் வேறு எவராலேயோ பக்தியால் சேர்க்கப்பட்டிருக்கவேண்டும். நமதாசார்யாள் இயற்றிய கிரந்தங்களிலெல்லாம் இது தான் இலகுவானது. சம்ஸ்கிருதம் படிக்கும் குழந்தைகளுக்கும் உபயோகப்படக் கூடியது என்று ஸ்ரீ ஸ்வாமிகள் சொன்னார்கள்.



# சின் முத்திரை.



நமது ஆதி ஆசார்யாள் அவதாரம் செய்து சுமார் 2500 வருஷங்களானதாகப் பழைய புஸ்தகங்களில் சொல்லியிருக்கிறது. அவர்களுக்கு நாலு சிஷ்யர்கள் இருந்ததாக ரவிவர்மா படங்களில் பார்க்கிறோம். அதே விதமாக சிவாலயங்களிலும் தெற்குப் பிரகாரத்தில் பரம சிவன் தக்ஷிணாமூர்த்தி சொரூபமாக நாலு சிஷ்யர் களுடன் உட்கார்ந்திருக்கிறார். அவரது வலது கை சின்முத்திரையைக் காட்டுகிறது. கட்டைவிரலையும் ஆள்காட்டி விரலையும் சேர்த்துப் பிடித்துக்கொண்டு அதன் மூலம் சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்கிறார். இதற்குச் சின்முத்திரை என்று பெயர். அங்குஷ்டத்தை யும் - (கட்டை விரலையும்) தர்ஜனியையும் - (ஆள்காட்டி விரலையும்) சேர்த்துக் காட்டினால் அது எப்படி ஞானோபதேசம் ஆகுமென்று கேட்கலாம். வாயால் சப்தரூபமாகச் சொல்லுவதற்குப் பதிலாகக் கையால் தனது உபதேசத்தைத் தெரிவிப்பதற்கு முத்திரை என்று பெயர். நாட்டிய சாஸ்திரங்களில் ஒரு சுலோகத்தை வாயால் சொல்லுவதற்குப் பதிலாக சைகை காட்டுவதுண்டு. தேகத்தின் சேஷ்டையால்

---

(19-12-32ல் ஏகாம்ரேச்வரர் கோவில் தெருவில் ஸ்ரீஸ்வாமிகள் செய்த உபந்யாஸம்)

கருத்தைத் தெரிவிப்பதற்கு முத்திரை என்று பெயர். பத்மமுத்திரை பிரும்மாவைச் சொல்லும். அவரைப் பற்றிச் சொல்லவேண்டியபொழுது தாமரையில் அவர் பிறந்தவராகையால் பத்மத்தைக் காட்டுவதுண்டு. விஷ்ணுவைச் சொல்லும்பொழுது சங்கமுத்திரையைக் காட்டுவார்கள். சின்முத்திரை என்ருல் என்ன அர்த்தம்? சித் என்ருல் ஞானம், முத்திரை என்ருல் அடையாளம். ஞானத்தை விளக்கும் அடையாளம் என்பது அதன் அர்த்தம். பரமசிவன் தக்ஷிணுமூர்த்தியாகி சின்முத்திரையைக் காட்டுகிருர். இவர் அருகில் ஸனகாதிகளாகிய நான்கு விருத்த சிஷ்யர்கள் இருக்கிருர்கள். மகாலிங்கத்திற்கு நேர் தெற்கில் தக்ஷிணுமூர்த்தி ஸ்தாபனம் செய்யப்பட்டு ஒவ்வொரு சிவாலயத்திலும் இருக்கிருர்.

चित्रं वटतरोर्मूले वृद्धाः शिष्या गुरुर्युवा ।
गुरोस्तु मौनं व्याख्यानं शिष्यास्तु छिन्नसंशयाः ॥

இதன் பொருள் :—

ஆலமரத்தடியில் ஒரு ஆச்சர்யத்தைக்கண்டீரா? அங்கு பதினுறு வயதுள்ள சிறு பிள்ளை ஒருவர் குருவாகவும் நான்கு விருத்தர்கள் சிஷ்யர்களாகவும் உட்கார்ந்திருக்கிருர்கள். எவ்விடத்திலும் விருத்தான குருவும் பால்யர்களான சிஷ்யர்களும் இருப்பதுண்டு. இங்கு மாறுபாடாக இருக்கிறது. சாதாரணமாக சிஷ்யர்கள் மௌனமாக இருக்க, குரு பேசிக்கொண்டிருப்பர். ஆனுல் ஆலமரத்தடியில் உள்ள குரு சிஷ்யர்களில், குரு பேசாமலே இருந்துகொண்டு சிஷ்யர்களுடைய சகல

சந்தேகங்களையும் நிவர்த்தி செய்துவிடுகிறார். அவர் தனது கை விரல்களால் சின் முத்திரையைக்காட்டி சகல சந்தேகங்களையும் போக்கடித்துக்கொண்டிருக்கிறார் இந்தச் சின்முத்திரையால் எல்லா வேதங்களின் அர்த்தமும் தெரிவிக்கப்படுகிறது. பரம்பொருளும், நமது அறிவும் ஒரே வஸ்து என்பதை தக்ஷிணாமூர்த்தி சின்முத்திரையால் தெரிவிக்கின்றார்.

இந்த இடத்தில் அநேக வாழைமரங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. அநேக வர்ணங்கள் பூசப்பட்டிருக்கின்றன. பல அலங்காரங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. இத்தனையும் இருந்து விளக்குகள் இல்லாமல் போனால் இவைகளைப் பார்க்க முடியாது. விளக்குகள் இருந்து கண்ணில்லையானால் பிரயோஜனம் இல்லை. இரண்டுமிருந்து மனஸ் இல்லாமற்போனால் உபயோகமில்லை. எல்லாமிருந்து ஆத்மா இல்லாமற்போனால் மற்றெல்லாம் உபயோகப்படாது. ஆகையால் சித் அதாவது அறிவும் பரம்பொருளும் ஒரேவஸ்து என்று சின்முத்திரை காட்டுகிறது. "ஹே ஈசா" என்று நாம் சொல்லும்போது ஆகாயப் பக்கம் கையை நீட்டி ஆள்காட்டி விரலால் காட்டுவோம். 'நான்' என்று சொல்லும்போது கட்டைவிரலால் மார்புமேல் தட்டிக்காட்டுவோம். ஆகையால் சின் முத்திரையானது நான் என்ற வஸ்துவும் ஈசுவரனும் ஒரேவஸ்து என்பதைக்காட்டுகிறது. ஈசுவரன் எவ்விடமோயில்லை, எங்கும் நிறைந்திருக்கிறார் என்ற பிரும்ம ஜீவ ஐக்கியத்தைச் சின்முத்திரை தெரிவிக்கிறது. ஞானத்தை நாம் கண்ணால் பார்க்க முடியாது, ஆனால்

முத்திரை ரூபமாகப் பார்க்கமுடியும். நமதாசார்யாள் இந்த ஞானத்தையே முத்திரை ரூபமாக நான்கு சிஷ்யர்களுக்குத் தெரியப்படுத்துகிறார் என்று சித்திரங்களால் அறிகிறோம்.

ஸுரேச்வராசார்யார், பத்மபாதாசார்யார், ஹஸ்தாமலகாசார்யார், தோடகாசார்யார் என்பன அந்தநான்கு சிஷ்யர்களின் பெயர்கள். சிஷ்யர்களுக்கு உபதேசிக்கும்படி நமதாசார்யாள் யாரிடமிருந்து ஞானத்தை அடைந்தார், அவருடைய குரு எப்படி ஞானத்தை அடைந்தார், அந்த குருவின் குரு எப்படி ஞானத்தை அடைந்தார் என்று பார்க்கும்போது, முதல் முதல் ஞானம் யாருக்கு வந்தது என்று நாம் தெரிந்துகொள்ள நேரிடும். நமது குருபரம்பரையைத் தியானம் செய்வதால் ஞானமும் க்ஷேமமும் உண்டாகும். எந்த வித்தையைக் கற்றுக்கொள்ளும்போதும் குருபரம்பரையை அறிந்துகொண்டு படிப்போமேயானல், அவர்கள் எல்லோருடைய அனுக்ரகமும் நமக்குண்டாகும்.

नारायणं पद्मभुवं वसिष्ठं
शक्तिं च तत्पुत्रपराशरं च ।
व्यासं शुकं गौडपदं महान्तं
गोविन्दयोगीन्द्रमथास्य शिष्यम् ॥
श्रीशङ्कराचार्यमथास्य पद्म
पादं चहस्तामलकञ्च शिष्यम् ।
तं तोटकं वार्तिककारमन्या
नस्मद्गुरून् सन्ततमानतोऽस्मि ॥

கோவிந்த பகவத்பாதாள் நமது ஆசார்யாளுடைய குரு. தங்களுடைய குருவைத் தியானம் செய்யும் பொருட்டு நமதாசார்யாள் "பஜ கோவிந்தம்" என்ற கிரந்தத்தைச் செய்தார்கள். அதில் ஸ்ரீமகாவிஷ்ணுவின் பெயரும் ஆசார்யாளுடைய குருவின் பெயரும் கலந்து வருகின்றன. மேற்சொன்ன குருபரம்பரைச் சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறவர்களில் ஸ்ரீமந்நாராயணன் முதல் சுகர் வரையில் சிஷ்யர் புத்ர பரம்பரையாக இருக்கிறார்கள்; பிறகு கௌடபாதர் முதல் சிஷ்யபரம்பரை. இந்தப்பீடம் அப்படிப்பட்ட மகான்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. விந்திய பர்வதத்திற்கு வடக்கில் இருக்கும் பிராம்மணர்களுக்குப் பஞ்ச கௌடர்கள் என்றும், அம்மலைக்குத் தெற்கிலுள்ள பிராம்மணர்களுக்குப் பஞ்சத் திராவிடர்கள் என்றும் பெயர். நமதாசார்யாளின் குருவினுடைய குருவாகிய கௌடபாதர் கௌடவகுப்பைச் சேர்ந்தவர். அவருடைய சிஷ்யர், நமதாசார்யாளின் குருவாகிய கோவிந்த யோகீந்திரர். அவருடைய சிஷ்யர் நமது ஆசார்யாள்.

ஸ்வாமிகள் சொல்வதைக் கேட்கவேண்டுமென்று நீங்கள் வெகு ஜனங்கள் வெகு நேரமாகக் காத்துக் கொண்டிருந்திருக்கிறீர்கள். நான் உள்ளே யாருடனாவது பேசிக்கொண்டு விருதா காலட்சேபம் செய்யாமல், உங்களுடைய ஆவலின் பலனாக குருபரம்பரையை ஸ்மரிக்க நேர்ந்தது. அப்படி ஸ்மரித்ததால் தன்யனானேன்.

---

# அம்பிகையின் அனுக்ரஹம்.

அம்பாளுடைய அனுக்ரஹமிருந்தால் நமக்கு வாக்கு நன்றாக வரும். அம்பாளே வாக்கு ஸ்வரூபம். நமது தேசத்தில் மகாகவிகளைப் பெரியோர்களாக பாவிப்பதுண்டு. ஒவ்வொரு தலைமுறையில் 33 கோடி ஜனங்களில் ஒருவர்தான் மகா கவியாகவும் அம்பாளுடைய கடாட்சத்தைப் பெற்றவராகவும் இருக்கலாம். அப்படிப்பட்டவர்களுடைய ஜன்மமே ஜன்மம். ஒவ்வொரு தலைமுறையிலும் மகாகவியாக இருந்திருக்கிறவர்களில் ஒருவர் மற்றெல்லோரையும்விடச் சிறந்தவராக அங்கீகரிக்கப்பெற்றிருக்கிறார். அவர் காளிதாஸன். மூவாயிரம் அல்லது நாலாயிரம் வருஷங்களுக்குள் அவர் இருந்தவர். அவரைப்போன்ற பெரியார்களின் படங்கள் இல்லை, ஆனால் பெயர் பிரக்யாதி அடைந்திருக்கிறது. அவருடைய பெயரைக் கவனித்தால் அவர் அம்பாளுடைய தாஸன் என்று தெரிகிறது. அவர் அநேக கிரந்தங்களை ஸம்ஸ்க்ருத பாஷையில் செய்திருக்கிறார். பள்ளிக்கூடங்களில் சிறுபிள்ளைகள் படிக்கக்கூடிய கிரந்தங்களையும் செய்திருக்கிறார். வாக்கே அம்பாளுடைய ஸ்வரூபமென்று அவர் ரகுவம்ச ஆரம்ப சுலோகத்தில் சொல்லியிருக்கிறார்.

---

(21-1-33ல் கச்சபேசுவரர் கோவிலில் ஸ்ரீ ஸ்வாமிகள் செய்த உபந்யாஸம்)

वागर्थाविव संपृक्तौ वागर्थप्रतिपत्तये ।
जगतः पितरौ वन्दे पार्वतीपरमेश्वरौ ॥

வாக்கும் அதன் அர்த்தமும் எப்படி ஒன்ருே டொன்று கலந்திருக்கின்றனவோ அப்படியே பார்வதி யும் பரமேசுவரனும் ஒன்ருக யிருக்கிருர்கள், வஸ்து ஒன்றே. ஒரு ஆஸனம் என்று நாம் சொல்லும்போது, உட்காரத்தக்க பலகை என்று பொருள் தாகை விளங்கு கிறது. சொல்லும் அர்த்தமும் சேர்ந்தே இருக்கின்றன என்ற அபிப்பிராயத்தைக் காளிதாஸன் இந்த ச்லோகத் தில் சொல்லியிருக்கிருர். ஸகல சாஸ்திரக்காரர்களும் அவரை மகாகவி என்று அங்கீகரித்திருக்கிருர்கள்.

ரகு மகாராஜனுக்கு முன் திலீபன் என்று ஒரு சக்ரவர்த்தி இருந்தார். ரகுவம்ச கதை இவருடைய காலத்திலிருந்தே ஆரம்பமாகிறது. திலீபன், ரகு, அஜன், தசரதன், ராமன், குசன் ஆகியவர்களுடைய சரித்திரங்களையும் குசனுக்குப்பிறகு வந்த பல தலைமுறை களைப்பற்றியும் காளிதாஸன் ரகுவம்சத்தில் சொல்லி யிருக்கிருர். ஸ்ரீராமன் வைகுண்டஞ் சென்றபிறகு, சரயூ நதியில் ஜனங்கள் எல்லோரும் இறங்கிவிட்டார் கள். குசனுக்கு விரக்தியுண்டாகி அயோத்தியை விட்டு விட்டு குசாவதி என்று ஒரு பட்டணத்தை நிர்மாணித்து அதில் ராஜ்யம் செய்துகொண்டிருந்தான். ஆனல் தன் னுடைய பெரியோர்களிருந்த அயோத்திக்கு அதிஷ் டான தேவதையை அவன் குசாவதியில் மந்திரங்களு டன் பூஜை செய்துகொண்டு வந்தான். ஒருநாள்

இரவில் குசன் தன்னுடைய அந்தப்புறத்தில் நித்திரை செய்துகொண்டிருந்தபோது அந்தத் தேவதை அவன் அருகில் வந்து நின்று அவனுக்குத் தரிசனம் கொடுத் தாள். குசன் விழித்துக்கொண்டு அங்கு நின்றுகொண் டிருந்தது யாரென்றறியாமல்

का त्वं शुभे कस्य परिग्रहो वा किं वा मदभ्यागमकारणं ते।
अचक्ष्व मत्वा वशिनां रघूणां मनः परस्त्रीविमुखप्रवृत्ति ॥

என்று கேட்டான். சுலோகத்தின் கருத்து :—

ஸர்வோத்தமமான குணங்களையுடைய நீ யார்? நீ யாருடைய பார்யை? ரகுவம்சத்தில் பிறந்தவர் களுக்கு எந்த ஸ்திரீயைப் பார்த்தாலும் எந்த ஏகாந்த காலத்திலும் மனஞ்சலிக்காது. ஆகையால் நீ ஏன் இங்கு வந்தாய்? சந்தேக பயங்களைவிட்டுப் பதில் சொல் என்று கேட்டான். அப்பொழுது அம்பிகை அவனைப்பார்த்துச் சொல்லுகிறாள் :—

चित्रद्विपाः पद्मवनावतीर्णाः करेणुभिर्दत्तमृणाळभङ्गाः ।
नखाङ्कुशाघातविभिन्नकुंभाः संरब्धसिंहप्रहृतं वहन्ति ॥

ஹே குசா, நீ அயோத்தியை விட்டுவிடுவது நியாய மல்ல. உன்னுடைய பெரியோர்கள் இருந்த நகரத் துக்கு நீ வந்துவிடவேண்டும். நான் அயோத்தியின் அதிஷ்டான தேவதை. நீ வந்துவிட்ட பிறகு அயோத் தியில் அநேக குறைகள் ஏற்பட்டுவிட்டன.

அயோத்தியில் மாடமாளிகைகள் இருக்கின்றன, ஆனால் ஜனங்களில்லை. மாளிகைகளில் சித்திரங்கள்

எழுதப்பட்டிருக்கின்றன. ஒரு சித்திரத்தில் இரண்டு யானைகள் தாமரைத் தடாகத்தில் இறங்கியிருக்கின்றன. ஸ்திரீயானை தன்னுடைய ப்ரேமையைப் பர்த்தாவுக்கு காட்டத் தாமரைத்தண்டுகளை துதிக்கையால் அறுத்துத் தன்னுடைய பர்த்தாவுக்கு அர்ப்பணம் செய்கிறது. இப்படி அயோத்தியில் யானைகள் சித்திரத்தில் காணப் படுகின்றனவே யல்லாமல் நிஜத்தில் இல்லை என்று அம்பிகை சொன்னதாகக் காளிதாஸன் சொல்லியிருக் கிறார். ஜனங்கள் போய்விடுவதால் நகரங்களின் களை போய்விடுகிறது. செஞ்சியைப்பாருங்கள், பழைய கட்டிடங்கள் இருக்கின்றன. ஜனங்களில்லை. புலிகள் அதிகமாக இருக்கின்றன. தேசிங்குராஜனிருந்த இடம் புலிகளுக்கு வாஸஸ்தலமாகிவிட்டது.

நிர்ஜனமாக அயோத்தியை விட்டுவிட்டது சரி யல்லவென்று அம்பாள் குசனுக்குச் சொன்னதன்மேல் அவன் அயோத்திக்குத் திரும்பிப்போனான். அம்பாளை ஆராதித்துவந்ததால் குசன் அவளைப் பிரத்தியட்சமாகக் காணும் பாக்யம் பெற்றான்.

நமது ஆதிஆசாரியாள் செய்த கிரந்தங்களில் ஸௌந்தர்ய லஹரி என்பது ஒன்று. அதில் ஒரு சுலோ கத்தில் ஸௌந்தர்ய லஹரி என்ற பதப்பிரயோகம் வருகி றது. அதையே கிரந்தத்தின் பெயராகக்கொடுத்துவிட் டார்கள். 'சிவாநந்த லஹரி' என்றும் 'பஜகோவிந்தம்' என்றும், 'ஹரிமீடே ஸ்துதி' என்றும், 'ப்ரபோத ஸுதா கரம்' என்றும் அவர்கள் செய்திருக்கிறார்கள். 'ஹரி மீடேஸ்துதி' என்பதற்கு விஷ்ணுவை ஸ்தோத்திரம்

செய்கிறேன் என்று அர்த்தம். 'ப்ரபோத ஸுதாகரம்' என்றால் அக்ஞானத்தை நிவர்த்திசெய்து ஞானத்தை உண்டாக்குவது என்று அர்த்தம்.

चेतश्चञ्चलतां विहाय पुरतः संधाय कोटिद्वयं,

तत्रैकत्र निधेहि सर्वविषयानन्यत्र च श्रीपतिम् ।

विश्रान्तिर्हित मप्यहो क नु तयोर्मध्ये तदालोच्यतां

युक्त्या वानुभवेन यत्र परमानन्दश्च तत्सेव्यताम् ॥

என்ற ப்ரபோத ஸுதாகரத்தில் உள்ள சுலோகத்தின் அதன் அர்த்தத்தைச் சொல்லுகிறேன் :— " ஹே மனஸே, தராசு முள் சலிக்காமல் நேராக நிற்பது போல், நீ உன்னுடைய ஆட்டத்தை நிறுத்திச் சிறிதுநேரம் ஆலோசனை செய்து பார். ஒரு தட்டில் உன்னுடைய ஆசைகள் எல்லாவற்றையும் வைத்து, மற்றத் தட்டில் ஸ்ரீ ஹரியை வைத்துப் பார் அப்பொழுது எது விசேஷமானதென்பது தெரியும். உனக்கு எதெதிடத்தில் ஆசையிருக்கிறதோ அவைகளையெல்லாம் ஒரு வரிசையாக அடுக்கி வைத்துக்கொண்டு அது வேண்டாம் அது வேண்டாம் என்று ஒவ்வொன்றாக அடித்துவிடுவாயானால், அதுவே மோட்சத்துக்கு வழியாகும். அதாவது மனதை ஏகாக்ரமாக வைத்துக்கொண்டு பக்தி செய்தால் மோட்சம் சித்திக்கும். இப்படிப்பட்ட விஷயங்களை உங்களுக்கெல்லாம் சொல்லும்படி நமதாசார்யாள் உத்திரவு செய்திருக்கிறார்கள். நீங்கள் எல்லோரும் நல்வழியில்

இருந்தால் அம்பாள் அனுக்ரஹம் தட்சணமே உண்டாகும். பக்தியை விருத்திசெய்ய நீங்கள் எல்லோரும் முயற்சிசெய்யவேண்டும். எந்தக்கார்யத்தைச் செய்கையிலும், ஈசுவரனைத் தியானம் செய்துகொண்டிருக்கவேண்டும்.



# திலக தாரணம்.



ஹிந்து மதஸ்தர்களுக்கும் மற்ற மதஸ்தர்களுக்கும் தோற்றத்தில் ஒரு பேதம் திலக தாரணத்தால் ஏற்படுகிறது. ஒருவன் ஹிந்து என்பதற்குத் திலக தாரணம் பெரிய அடையாளம். திலகமிட்டுக் கொள்ளாத ஹிந்து பல சமயங்களில் அன்னிய மதஸ்தனுகக் கருதப்படுவதுண்டு. ஸத்சுவபாவமும் ஸன்மார்க்கப் பிரவர்த்தியும் நமக் குண்டாகும்படி திலக தாரணம் ஸகாயஞ் செய்கிறது. ஹிந்துக்கள் திலக தாரணம் செய்து கொள்ளாமல் எந்தச் சுபகார்யத்தையும் செய்யக் கூடாது. தமிழில் நாமத்திற்குத் திருமண் என்றும், விபூதிக்குத் திரு நீறு என்றும் பெயர். இரண்டிலும் 'திரு' என்ற அடைமொழி சிரேஷ்ட வாசகமாக இருக்கிறது. மண் என்பது ப்ரக்ருதி, நீறு என்பது சாம்பல். பரமேசுவானுடைய சிருஷ்டியில் பிரதம பதார்த்தம் மண். அதனுலேயே பஞ்ச பூதங்களில் பிரக்ருதி முதலில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதிவராஹ மூர்த்தி பூமியை ஜலத்திலிருந்து உத்தாரணம் செய்தார். "உத்ருதாஸா வராஹேண" என்று இதற்குப் பிரமாணம் இருக்கிறது. மண் மிகவும் பவித்திரமான வஸ்து. பூமி

---

(15-12-32. ல் ஏகாம்ரேசுவரர் கோவில் தெருவில் ஸ்ரீ ஸ்வாமிகள் செய்த உபந்யாசம்.)

யில்லா விடில், நாம் இருப்பதற்கு இடமிராது, ஆகாரமும் கிடைக்காது. பூமியில் ஸகல பிராணிகளும் பிழைக் கின்றன. மகாவிஷ்ணு ஜகத்தைப் பரிபாலிப்பவர். ஆகையால் பூமியை உத்தாரணம் செய்தார். பூமியை நாம் பூதேவி என்கிறோம். பூமியை விஷ்ணுப் பிரஸாத மாக விஷ்ணு பக்தர்கள் நினைத்து விஷ்ணுபாத ஆக்ரு தியாக திருமண்ணை முகத்தில் தரிக்கிறார்கள். திரு மண்ணுடைய நிறம் துல்யமானது, அப்படியே திரு நீறும் துல்யமாக விருக்கிறது.

திருநீறுக்கு மூலமான பசு நம்மால் பூஜிக்கப்படு கிறது. அது தன்னுடைய் கன்றுக்குப் பால்கொடுத்து ரட்சிப்பதல்லாமல், ஸகல ஜனங்களுக்கும் பால் கொடுத்து அவர்களையும் ரட்சிக்கிறது. ஆகையால் பசுவானது ஸகல ஜனங்களுக்கும் தாயாகவிருக்கிறது. அக்காரணத் தாலேயே அதை கோமாதா என்று சொல்லுகிறோம். விசேஷ குணங்கள் நிறைந்துள்ள கோகுலத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் வளர்ந்ததே கோவின் மெருமையைத் தெரி விக்கிறது. பசுவின் சாணம் எதையும் சுத்திசெய்கிறது. அதை அக்னியில் போட்டால் தனது நிறத்தை மாற் றிக்கொண்டு துல்யமான வெளுப்புநிறத்தை அடைந்து விடுகிறது. உலகில் மாயையால் தோன்றும் துக்கம், அசூயை, பாபம் முதலியன போய் கடைசியில் பரமேசு வரன் ஒருவரே நிற்பதுபோல், சாணமும் தன்னுடைய நிறம், வாசனைகளை விட்டுப் பரிசுத்தமான திருநீறாகி விடுகிறது. ஆகையால் விபூதி சிவஸ்வரூபம். ஸர்வ மும் தன்னில் லயிக்கும்படி செய்யும் சிவம்தான்

விபூதி. சிவஸ்வரூபமான விபூதியை உடம்பிலும் முகத்திலும் முதலில் பூசிக்கொண்டு பிறகு பிரும்மமானது திருகுணாத்மகமாகவும் திருமூர்த்தி ஸ்வரூபமாகவும் விளங்குகின்றது என்பதை ஞாபகப்படுத்திக்கொள்ள திருபுண்டரமாகதரிக்கிறோம்.

விபூதி கிடைக்காதபோது எந்தமண்மேல் நிற்கிறோமோ அந்த மண்ணையே எடுத்துப்பூசிக்கொள்ளலாம். அந்தமண்ணும் பரமேசுவர ஸ்வரூபந்தான். ஸகலமும் பரமேசுவர ஸ்வரூபமே. விபூதி குங்கும பிரஸாதங்கள் கிடைக்க நாம் கஷ்டப்படவேண்டியதில்லை. பூமிமேல் இருக்கும் மண் ஈசுவரப்பிரஸாதமே; அதை நாம் பூசிக்கொள்ளலாம். ஸகலமும் ஈசுவரஸ்வரூபமே என்று நாம் நினைப்போமேயானால், பாவமே செய்யமாட்டோம். ஸகலமும் ஈசுவரஸ்வரூபம் என்று நினைப்பது போதாது, ஈசுவரஸ்வரூபம் என்று அறிந்து கொள்ளவேண்டும்.

இக்காலத்தில் நவீன சாஸ்திரங்களைக் கற்றவர்கள் அநேக விசித்திரமான வஸ்துக்களைச் செய்கிறார்கள், ஆனால் சிருஷ்டியில் உள்ள வஸ்துக்களை வைத்துக் கொண்டுதான் அவர்கள் வேறுவஸ்துக்களைச் செய்ய முடிகிறது. ஈசுவரன் சிருஷ்டித்த இந்த வாழை இலையை அவர்கள் செய்யமுடியாது. ஈசுவரனுடைய வல்லமையை இந்த ஒரு விஷயமே காட்டுகிறது.

இப்பொழுது குளிரும் மழையும் மிகுதியாக வுள்ள காலம். இப்படியே வெயில் அதிக உக்கிரமாக இருக்கக் கூடியகாலம் வருமென்று நாம் ஊகிக்கமுடியும். இக் காலத்தில் பாவம் அதிகமாக விருக்கிறது. விடிந்தது

முதல் படுக்கைக்குப்போகும் வரையில் பாபங்களைச் செய்கிறோம். முன்னொருகாலத்தில் புண்ணியமே செய்து கொண்டிருந்த மகாஞானிகள் இருந்திருக்கவேண்டு மென்று நாம் ஊகிக்கமுடியும். இந்த மகாஞானிகள் நமக்கு மகோபகாரம் செய்திருக்கிறார்கள். நாம் எல்லா வஸ்துக்களும் பரமேச்வர ஸ்வரூபம் என்று தெரிந்துக் கொள்வது கஷ்டம் என்று நினைத்து ஞானிகள் சில க்ஷேத்திரங்களுக்கும் தீர்த்தங்களுக்கும் சென்று பரமேச்வரா! இந்த க்ஷேத்திரங்களும் தீர்த்தங்களும் விசேஷமகிமை உடையனவாக இருந்து இவ்விடங்களுக்கு வரும் பக்தர்களுக்கு அனுக்ரஹம் செய்ய வேண்டும் என்று அவர்களுடைய மந்திரசக்தியினால் ஈசுவரனை பிரார்த்தனைச் செய்தார்கள்.

பருத்தியை வெயிலில் போட்டால் அது எரியாது. ஆனால் ஒரு பூதக் கண்ணடியை (Lens) வைத்து அதன் கிரணங்களை அதன் மூலமாகப் பருத்திமேல் படும்படி செய்தால் பருத்தி எரிந்து விடும். அதே விதமாக ஒரு ஜலத்தை கங்கா ஜலமாகவும், ஒரு கல்லை சுவாமியாகவும் ஒரு மண்ணைத் திருநீறாகவும், ஒரு க்ஷேத்திரத்தை புண்ணிய க்ஷேத்திரமாகவும் நினைத்து நாம் பக்தியைச் செலுத்தினால் நம்முடைய ஸகல பாபங்களும் துலைந்து விடும்.

ஆகையால் நம் பெரியோர்கள் இருந்தபடியும், சாஸ்திரங்கள் கூறுகிறபடியும் அவரவர்கள் அவரவர்களுக்கான விபூதியொ அல்லது திருமண்ணோ முகத்

தில் தரித்து காமக்குரோதங்களைவிட்டு ஆலயங்களுக்குப் பிரதிதினமும் சென்று பரமேச்வரனுடைய கிருபையைச் சம்பாதிக்க பிரயத்தினம் செய்ய வேண்டும்.



# ஸந்தியாவந்தனம்.

கர்மாக்களில் ஸந்தியாவந்தனம் முக்கியமானது. அதன் பெருமையைச் சொல்லமுடியாது. தவருமல் அதைச் செய்து கொண்டுவரவேண்டும். நமக்கு சரீர அசௌக்கிய மேற்படினும், ஸந்தியாவந்தனத்தை விடக் கூடாது. முன்காலத்தில் நமது பெரியோர்களுக்கு ஏதேனும் சரீர அசௌக்கிய மேற்பட்டுவிட்டால், பந்துக்களில் யாரையாவது கூப்பிட்டுத் தமக்காக ஸந்தியாவந்தனத்தை மறுபடி செய்யும்படி செய்து அவர் மூலம் தீர்த்தத்தை ப்ராசானம்செய்வது வழக்கம். நாமும் அப்படியே செய்யவேண்டும். நாம் அபிவாதனத்தில் ப்ரவரம் சொல்லும்போது பல ருஷிகளுடைய பெயர்களைச் சொல்லுகிறோம். அந்த ருஷிகளுடைய காலத்திலிருந்து இடைவிடாமல் நடந்துவந்திருக்கிற இந்த கர்மா, நம்முடைய காலத்தில் கத்தரித்துப் போகாமல் நமதாயுள் இருக்கும்வரையில் ஸ்திரமாகச் செய்யவேண்டும்.

"गायत्रीमात्रसारोऽपि द्विजो भवति निर्भयः"

ஒருவர் நிர்ப்பயமாக இருக்கவேண்டுமானல், வேதாத்யயனம் செய்யவேண்டும், தவறினல் காய

---

கிண்டியில் 26-11-32ல் ஸ்ரீ ஸ்வாமிகள் செய்த உபந்யாஸம்

த்ரியை ஹிருதயத்தில் வைத்துக்கொண்டு உபாஸித்தால் இகபர ஸௌக்கியங்கள் கிடைக்கும்; ஸந்தியாவந்தனத்தில் பிரதானம் அர்க்கியமும், காயத்ரிஜபமும். ஸந்தியாவந்தனத்தின் அங்கங்கள் ஸங்கல்பம், ப்ரோட்சனம்' ப்ராசனம், அர்க்கியம், முதலியன. இவைகளைக் கிரமமாகச் செய்துவந்தால் சித்த சுத்தியும் தேக சுத்தியுமுண்டாகும். இந்திரியங்கள் ஸ்பர்சிப்பதால், அவை சுத்தி அடையும். ப்ராணாயாமம் சித்த சுத்தியை உண்டாக்கும். ஸந்தியாவந்தனத்தை அங்கங்களுடன் செய்யாவிடில் வியங்கமாகும்.

காயத்திரியை உபாஸனைசெய்தால், பாபமேற்பட மாட்டாது. இது வேண்டும், அது வேண்டும் என்ற ஆசையில்லாமல் காயத்ரியை ஜபித்தால், பயமேற்பட மாட்டாது. இக்காலத்தில் ஹிப்னடிஸிம், மெஸ்மரிஸம் என்று சொல்லப்படும் வித்தைகளை அப்யஸிக்கிறார்கள். பிறருடைய மனஸைத் தெரிந்துகொள்ளுவதும், பிறருடைய மனஸை வசியப்படுத்துவதும் அவைகளின் பிரயோஜனங்கள். இவைகளைக் காட்டிலும் அநேகமடங்கு பெருமையுள்ள சக்தியை காயத்ரி உபாஸனை தரும். புனர்ஜன்மமில்லாமலும் செய்து இகத்தில் சௌக்கியங்களையும் தரும். ஸந்தியாவந்தனமுடிவில் அபிவாதனஙிகள் முக்கியம். ப்ரவரம் சொல்லும்போது சில கோத்ரிகள் இரண்டு ரிஷிகளையும் சிலர் மூன்று ரிஷிகளையும் சிலர் பஞ்ச ரிஷிகளையும் செல்வதுண்டு; அதாவது நம்முடைய முன்னோர்களில் மகாத்மாக்கள் இருந்தார்கள் என்று சொல்லுகிறோம். அப்படிப்பட்ட பெரியோர்களிட

மிருந்து தலைமுறை தலைமுறையாக வந்துள்ள ஸந்தியா வந்தனத்தை உபதேசமூலம் நாம் கிரஹித்து காயத்ரி உபதேசமாகிய நெருப்புப்பொறி ஜ்வலிக்கும்படி செய்து ஸகல க்ஷேமங்களையும் அடையவேண்டும்.

தெலுங்கப் பிராம்மணர்கள் " சதுஸ்ஸாகர பர்யந்தம் கோப்ராம்மணேப்யோ சுபம் பவது " என்று முதலில் சொல்லிவிட்டுப் பிறகு ருஷிகளுடைய நாமங்களைச் சொல்வது வழக்கம். அதாவது நான்கு சமுத்திரங் களுக்குமிடையிலுள்ள கோக்கள் முதலிய ஸகல ப்ராணிகளும் பிராமணர்கள் முதலிய ஸகல ஜனங்களும் க்ஷேமமாக இருக்கவேண்டுமென்று பிரார்த்தித்த பிறகு தங்களுடைய வம்சரிஷிகளுடைய பெயர்களைச் சொல்லி நமஸ்காரம் செய்கிறார்கள். முற்காலத்திலும் பிராம்மணர்களும், பசுக்களும் எங்கும் வியாபித்திருந்தார் கள் என்று தெரிகிறது. இப்பொழுது ஸ்ரீவத்ஸ கோத் ரோத்பவன் ஒருவன் " பார்கவ, ச்யவன, ஆப்னவான, ஔர்வ, ஜாமதக்னிய " என்று பஞ்ச ரிஷிகளின் பெயர் களைச் சொல்லும்போது, தன்னுடைய கோத்ரத்தில் தனக்கு முன் இருந்த பெரியார்களில் பார்கவர், ச்யவ னர் முதலிய மகான்கள் இருந்ததைத் தெரிந்துகொள்ளு வன். இப்படி நமக்கு சக்தியைத்தருவதும், பெருமை யைத் தருவதுமாகிய ஸந்தியாவந்தனத்தைத் தள்ளி விடாமல், செய்து எல்லோரும் இகபர க்ஷேமங்களை அடையவேண்டும்.



# ஸ்தூல ஸூக்ஷ்ம தேகங்கள்.



"நாம்" என்று ஒரு வஸ்துவைச் சொல்லுகிறோம். அதற்கு இருப்பிடம் நமது தேகம். இந்த தேஹம் ஸ்தூலமானது. சர்மம், ச்ரவியம், மஜ்ஜை முதலியன சேர்ந்து ஸ்தூல தேகம் உண்டாகியிருக்கிறது. மனஸ் சூட்சுமமானது. என்னுடைய மனஸ் என்று சொல்லு கிறோம். சிலருடைய ஸ்தூல தேகம் பலமுள்ளதாக வும், சிலருடைய ஸ்தூலதேகம் பலமற்றதாகவுமிருக் கிறது. நாம் சிறிது பிரயத்தனம் செய்தால், இந்த ஸ்தூல தேகத்திற்கு விசேஷ பலத்தைச் சம்பாதித்துவிட முடி யும். அதி சீக்கிரத்தில் ஸாண்டோ என்ற பயில்வான் போலாகிவிடலாம். அப்பொழுது ஸாமான்யமாக முடி யாத காரியங்களைச் சுலபமாகச் செய்துவிட முடியும். ஒரு யானையை மார்புமேல் தரிக்கலாம். இப்படிப்பட்ட சக்தியை ஸர்வேசுவரன் எல்லோருக்குமே கொடுத்திருக் கிறார். அதை நாம் விருத்தி செய்துகொள்ளவேண் டும். விருத்தி செய்து கொள்ளக்கூடிய சக்தி நம்மிடத் தில் பிறப்புமுதல் அடங்கியிருக்கிறது. ஆனால் அப்படி ஒரு பளுவைத் தாங்குவதற்கும் ஒரு எல்லையுண்டு. அது ஸ்தூல சரீரத்தின் குணம்.

---

28-11-32-ல் மைலாப்பூரில் ஸ்ரீ ஸ்வாமிகள் செய்த உபந் யாஸம்.

ஆனல் மனஸான சூட்சுமதேக விஷயத்திலும் பிரயாஸைப் பட்டால், அளவில்லாத சக்தியைப் பெறலாம். ஸ்தூலதேகத்தால் சிறிதுதூரம் போகலாம், பிரயத்தனப் பட்டு ஒரு கட்டிடம் கட்டலாம்; ஆனல் மனஸினல் எவ்வளவு தூரமும் போகமுடியும், எத்தனை கட்டிடங்கள் வேண்டுமானலும் கட்டமுடியும். ஆகையால் மனஸுடைய சக்தியை நாம் விருத்திசெய்தால், எல்லையற்ற சக்தியைப் பெற்று ஸகல காரியங்களையும் செய்ய முடியும். பிரம்மபட்டத்தை அடைதல் முதலிய காரியங்களை மனஸ் சக்தியால் மாத்திரம் செய்யமுடியும்.

எல்லா வஸ்துக்களும் ஒன்றே என்ற ஏகைக பாவத்தை நாம் மனஸில் நினைக்கவேண்டும். தட்சிணமூர்த்தி அஷ்டகம் பல சுருதியில்

सर्वात्मत्वमिति स्फुटीकृतमिदं यस्मादमुष्मिंस्तवे
तेनास्यश्रवणात्तदर्थमननाद्ध्यानाच्च संकीर्तनात् ।
सर्वात्मत्त्वमहाविभूतिसहितं स्यादीश्वरत्वं स्वतः
सिद्ध्येत्तत्पुनरष्टधापरिणतञ्चैश्वर्यमव्याहतम् ॥

என்று சொல்லப்பட்டிருக்கிறது. நம்மைவிட வேறென்று இருப்பதாக நாம் பாவிப்போமானல், சிலதைவிட நாம் தாழ்மை என்று தோன்றும். எல்லாமே நாமே என்று ஏகைகமாக நினைப்போமானல், அப்பொழுது ஸமத்வபுத்தி ஏற்படும். ஸர்வாத்மதத்துவத்தை அறிந்துகொண்டு, அதை த்யானிப்பதால், அணிமாதி அஷ்ட ஐசுவரியங்களும் உண்டாகும்;

அதனுடன், ஈசுவரத்துவமும் அடையலாம். ஆகையால் மனஸை அபிவிருத்திசெய்வதால் ஈசுவரத்துவமே கிடைத்துவிடும். இதற்குச் சந்தேகமில்லை. ஆகையால் எல்லோரும் எக்காலத்திலும் இதற்குப் பிரயத்தனம் செய்யவேண்டும். இந்தப் பிரயத்தனத்திற்கு ஸாதக மாக அந்தரங்க பகிரங்க ஸாதனங்கள் சொல்லப்பட் டிருக்கின்றன. அந்தரங்க ஸாதனங்கள் சாந்தி, தாந்தி முதலானவை. பகிரங்க ஸாதனங்கள் ஸ்நான ஸந்தியாதி கள். ஒவ்வொரு ஜீவாத்மாவும் தான் கடைத்தேற, மேற்சொன்ன ஸாதனங்களை அனுஷ்டிக்கவேண்டும். சில பெரியோர்கள் தமக்குக் கிடைத்த பலனைப் பிருக் குக் கொடுத்துவிடுவதுண்டு. சாஸ்திரங்களில் மகான்கள் சொல்லியிருக்கும் சாதனங்களை அனுஷ்டித்துப் பல னடைந்து கடைத்தேறக்கூடியவர் கோடியில் ஒருவ ரேனுமிருப்பின் அவர் ஒருவரால் அநேகர் சிரேயஸை அடைவர்.

மனிதன் குணவானாகவேண்டு மென்று முயற்சி செய்கிறான். எந்தக் கார்யத்தையும் ஈசுவரார்ப்பண புத்தியுடன் நாம் செய்யவேண்டும். எக்காலத்திலும் அகம் பாவத்தை விட்டுவிடவேண்டும். பிறர் மெச்ச வேண்டுமென்று பூஜை முதலியன செய்தல் வீண். பிரும்மார்ப்பண புத்தியுடன் நாம் செய்யும் காரியங்கள் நம்முடைய திடபக்தியைக்காட்டும். ஸத்குணமில்லா விடில் பக்தி நிலைக்கமாட்டாது.

அதாவது நியாயமார்க்க ப்ரவிருத்தியில் இருக்கும் குணவானுக்கு திர்யக் ஜந்துக்களாகிய பசுக்களும் பட்சி

களுங்கூட சகாயஞ்செய்கின்றன ; எவனொருவன் அநி யாய வழியில் போகிறுனே அவனை சகோதரனுள்பட எல்லோரும் கைவிட்டுவிடுவார்கள்.

यान्ति न्यायप्रवृत्तस्य तिर्यञ्चोऽपि सहायताम् ।
अपन्थानन्तु गच्छन्तं सोदर्योऽपि विमुञ्चति ॥

ஈசுவரன் மனிதனைப் புத்தியுள்ளவனுகச் சிருஷ்டித் திருக்கிறுர் ; அதாவது புண்யபாவங்களைத் தெரிந்து கொண்டு ஊர்த்துவலோகத்தை அடைவதற்கு முயற்சி செய்யத்தக்கவனுகச் சிருஷ்டித்திருக்கிறுர். இந்தப் புத்தி பட்சிகளுக்கும் மிருகங்களுக்குமில்லை. அவை களுக்குப் புண்யபாவமில்லை. ஒருபசு ஒருவனை முட்டி விட்டால் அதற்குப்பாபமில்லை ; ஏனென்றுல் அபகாரம் செய்யவேண்டுமென்ற எண்ணம் அதற்கில்லை ; ஆனுல் மனிதன் அதேகாரியத்தைச் செய்தால், அதன் பலனை அனுபவிக்கிறுன். துர்க்குணங்களையுடைய ஒருவன் எவ்வளவு பணமுடையவனுக இருப்பினும், எவ்வளவு வித்வானுக இருப்பினும், ஜனங்கள் அவனை மதிக்க மாட் டார்கள், துஷ்டன் என்று நிந்திப்பார்கள். அவனைச் சிட்சிக்கப் பிரயத்னமும் செய்வார்கள். துஷ்டர்களை அபிமானிப்பது பாபம் ; அவர்களைச் சிட்சிப்பது புண்யம். இந்த அபிப்பிராயமே மேற்கூறிய சுலோகத்தில் சொல் லப்பட்டிருக்கிறது. இந்தச் சுலோகத்தின் கருத்து இருபத்திநான்கு ஆயிரம் சுலோகங்களாகவிருந்து ராமாயணமாகியிருக்கிறது. வெகு பராக்கிரமசாலியும் ஸகல கல்யாணகுணங்களையுடையவருமான ஸ்ரீராமனுக்

குத் திர்யக் ஜந்துக்களாகிய வானரங்கள் சகாயம் செய் தன என்பது நமக்குத் தெரியும். துன்மார்க்கனுகிய ராவணன் தனது சகோதரனுகிய விபீஷணனுலும் கைவிடப்பட்டான். ஆகையால் மனிதனுக்குக் குணமே பிரதானமானது. நமது தேசத்தில் பரஸ்பர விருத்த மாகத் தோன்றும் வெவ்வேறு மதங்கள் வியாபகமடைந் திருக்கின்றன. வைஷ்ணவர்கள், சைவர்கள், மத்வர் கள் முதலியவர்கள் ஒருவரை ஒருவர் நிந்தனே செய் கிறுர்கள். ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு மதாச்சாரி யார் தம்தம் மதத்தைப் பிரசாரம் செய்தபோது, ஜனங் கள் அந்தந்த ஆசாரியர்களே அபிமானித்து அவர்களு டைய மதத்தை ஸ்வீகரித்தார்கள். இதற்குக் காரணம் அந்தந்த ஆசாரியாளுடைய குணமே. அவர்கள் தம்தம் மதத்தை நிலேநிறுத்தினதற்கு அவரவருடைய குணமும் வாக்கு சாதுர்யமும் யோசனேகளும் முக்கிய ஆதாரமாக விருந்தன. அநேக ஜனங்கள் சம்மதப்பட்ட விஷயங் களே சத்யமாகவும் ஈசுவர சம்மதமானவைகளாகவும் ஜனங்கள் கிரகிப்பார்கள்; ஆனுல் சில சமயங்கள் வெகு ஜன சம்மதமான விஷயம் சத்யமில்லாததாகவுமிருக் கும். கள்குடி வெகு ஜன சம்மதமான கார்யமாக விருக்கிறது, அதை நாம் சரியான கார்யமென்று ஒப்ப வில்லே. ஆகையால் (மெஜாரிடி) வெகு ஜனங்கள் சம்மதித்த எல்லாக் காரியங்களும் சத்தியமென்று நிச்சயம் செய்யப்படக்கூடியவனல்ல. எந்தக் காரியத் தையும் நன்குக விசாரித்துச் செய்யவேண்டும்.

கோடி கோடியாக தனத்தைத் தமது பாதத்தில் கொட்டினலும் அதை அலட்சியமாக நினைக்கும் புண்யாத்மாக்கள் லோகத்தில் ஒருவராகிலும் இருந்தே தீருவர். அப்படிப்பட்ட மகனீயர்களுடைய சகாயத்தால் ராஜாக்கள் ராஜ்யம் செய்யவேண்டும். முற்காலத்தில் வஸிஷ்ட விசுவாமித்திரர்கள் மேற்கூறிய குணமுடைய புண்யாத்மாக்களாகவிருந்தார்கள். அவர்களுடைய யோசனையில்லாமல் ராஜ்யத்தில் எந்தக் காரியமும் செய்யப்படமாட்டாது. தனத்துடன் குணமும் கூடியிருந்தால்தான் ஒரு ராஜ்யம் பிரகாசிக்கும். தனமிருக்கிறவர்கள் எல்லோரும் புண்யஞ் செய்வதில்லை. எவரிடத்தில் குணமிருக்கிறதோ அவர் சௌக்கியமடைகிறார். ஸத்யத்தையே பேசுதல், மாத்ருபித்ருபக்தி, முதலியன குணங்களாகும். ஒருவர் இன்னொருவரை கௌரவப்படுத்தும்போது, அவருடைய குணத்தை அனுசரித்தே கௌரவப்படுத்துகிறார். முற்காலத்தில் நற்குணமுடையவர்கள் காடுகளில் இலைகளையும் பழங்களையும் புசித்துக்கொண்டு தவஞ்செய்து வந்தார்கள். ராஜாக்கள் அவர்களைத் தேடிக்கொண்டு ராஜ்யத்துக்கு அழைத்துவந்து அவர்களுடைய அனுக்கிரஹத்தை அடைந்தார்கள்.

சுகுணங்கள் ஒன்றாகக்கூடி ஒரு உருவத்தை எடுத்துக்கொண்டு லோகத்தில் ஒரு வஸ்துவாகப் பிறக்கும்போது அதை அவதாரமென்று சொல்லுகிறோம். இதற்கு உதாகரணம் ஸ்ரீராமாவதாரத்தை எடுத்துக் கொள்ளலாம். அவதார புருஷர் தன்னுடைய சுகுணங்

களை ஒவ்வொரு விஷயத்திலும் காட்டிக்கொண்டிருப்பர். ஸ்ரீராமர் மகா பொறுமையுடையவர், பல கஷ்டங்களை அனுபவித்தார். பல கஷ்டங்களிலும் அவர் தம்முடைய சாந்தத்தை விடவில்லை. அதர்மமார்க்கத்தில் பிரவிருத்திக்கவில்லை. பிதுர்வாக்ய பரிபாலனம் செய்யவே அவர் சகல கஷ்டங்களையும் அனுபவித்தார். பிதாவின் ஆக்ஞையை அனுஷ்டிப்பதில் புண்ய பாப விசாரணை நம்மைச் சேர்ந்ததல்ல.

रामादिवत् वर्तितव्यम् । न रावणादिवत् ॥

என்று புராணங்கள் போதிக்கின்றன. புராணங்களில் நாம் புத்தியைச் செலுத்துவதை விடக்கூடாது. தர்மத்தை ஸ்தாபிப்பதற்கு தர்ம சாஸ்திரங்கள் இருக்கின்றன. கதைகளிலிருந்து நாம் தர்மத்தைத் தெரிந்துகொள்ளலாம். அப்பொழுது நாம் ஒரு புராணத்தை என் படிக்க வேண்டுமென்று கேட்கலாம். தர்மத்தை உபதேசிப்பதற்குப் பதிலாக, அவைகளை சரித்திரமூலமாக நாம் அறிந்துகொண்டால் அத்தர்மங்கள் நன்றாக மனதில் பதிந்துவிடும். இதுதான் புராணங்களுடைய தத்வம். நாம் நற்குணத்தை அபிமானிப்பவர்கள், ஆகையால் சத்குணத்தைச் சம்பாதிக்கவேண்டும். ஆசையை விட்டுவிட்டால்தான் நமக்கு சத்குணங்கள் உண்டாகும். லோகத்தை விட்டுவிட்டால் நமக்கு சகல சிரேயசும் உண்டாகும்.

முற்றிற்று.

---

Printed at the Hindi Prachar Press, Madras.